# செந்தமிழ்ச்

# செல்வி




## உள்ளுறை


பாவேந்தர் டல்கலைக் கழகம்
பல்லாண்டு வாழ்க! ௧௫௧

மலையும் ஞாயிறும் ௧௫௬

பதிற்றுப்பத்தில் ஆடுகோட்பாட்டுச்
சேரலாதன் ௧௬

நெல்லையில் நெடியமால் ௨௬

வேர்ச்சொற் கட்டுரைகள் ௧௬

பாண்டித்துறைத்தேவர்
பாடிய காவடிச்சித்து ௧௭

ஆட்சிமொழித் துணுக்குகள்—1 ௧௭

திருமூக்கீச்சரம் ௧௮

தொல்காப்பியத்தில்
உயிரளபெடை ஆட்சி ௧௮

செய்திகளும் குறிப்புகளும் ௧௬


சிலம்பு-௫௬] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩ பங்குனி April '82 [பரல்-௮

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)






“ செந்தமிழ்ச் செல்வி ”

ஆண்டுக் கையொப்பம் (Subscription Rate)

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம்

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௬ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, பங்குனி<br>ஏப்பிரல் 1982 | பரல் ௮ |
|---|---|---|


## பாவேந்தர் பல்கலைக் கழகம் பல்லாண்டு வாழ்க!

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு!"

என முழங்கிய பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் பெயரால், பல்கலைக் கழகமொன்று 28—4—'82 அன்று திருச்சி மாநகரில் அமையவிருக்கும் செய்தி கேட்டு அகமிக மகிழ்கின்றோம். திக்கெட்டும் பாரதியார் நூற்றாண்டு விழா நடைபெறுகின்ற இவ்வேளையில், பாட்டுக்கொரு புலவராம் அவர்தம் அடிச்சுவட்டில் புரட்சி நடைபோட்டுப் புதுமைக் கருத்துகளை அள்ளிவீசித் தமிழக மாந்தரிடையே ஒரு புத்துணர்வை ஏற்படுத்திய புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் புகழ் என்றும் நின்று நிலவ ஈடு இணையற்ற நினைவுச் சின்னமொன்று உளதெனில் அஃது இப் பல்கலைக் கழகமே என்பதில் ஐயமில்லை. எனவே, இத்தகையதொரு சீரிய பணியில் ஈடுபட்ட தமிழக அரசினை முதற்கண் உளமார வாழ்த்துகின்றோம்.

பாரதிதாசனார் தமக்குச் சரியெனப் பட்டதைத் துணிவுடன் உரைக்கும் தூய அஞ்சா நெஞ்சம் படைத்தவர். தமிழ்—தமிழர்—தமிழ்நாடு என்னும் ஒப்பற்ற முப்பற்றுகளே அவர்தம் உயிர் மூச்சு. அந்த அடிப்படையில் நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டாற்றிய நன்மக்களை அவர் நாவார—மனமாரப் போற்றினார். அவர் போற்றி எழுதிய கவிதைகள் பொருள் பொதிந்தவை—படிக்குந்

தோறும் சுவை பயப்பன. அவர்தம் கவிதைகளில் போலிப் புனைவுகளைக் காண்பதரிது. போற்றுபவர்களைப் போற்றத் தவற மாட்டார். அங்ஙனமே குற்றங் குறைகள் கண்டவிடத்தும் தூற்றுதற்கும் அஞ்சார். இத்தகைய புரட்சியுள்ளம் படைத்த அக்கவிஞர் பெருமான், நம் கழகப் பணிகளையும் கழக ஆட்சியர் அவர்களின் சீரிய தமிழ்த் தொண்டினையும் வியந்து பாராட்டும் முகத்தான் இயற்றிய பா ஒன்றினைக் காண்மின் :

“திருநெல்வேலிச்சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் போலும்
ஒருநல்ல தமிழ்வளர்க்கும் நிறுவனமும்
கண்டதில்லை உலகில்! அந்த
உரைமல்கு நிறுவனமும், முப்போதும்
தமிழுக்கே உழைக்கத் தக்க
பெருநல்லான் தமிழ்ப்புலவன் சுப்பையன்
போற்பிறரைப் பெற்ற தில்லை.

நூலெல்லாம் விளையுமங்கே நூறாயி
ரக்கணக்கில் ! நூல்ஒவ் வொன்றின்
மேலெல்லாம் அழகுசெயும் சுப்பையன்
மிகு திறமை! அதுவுமின்றிக்
காலெல்லாம் சிலம்பொலிக்கத் தமிழரசி
உலகரங்கு காணும் வண்ணம்
தோலெல்லாம் சுளைப்பயன் கொள் புதுப்புது நூல்
தோற்றுவிப்பான் அந்த மேலோன்.”

இஃது ஏறக்குறைய இருபத்தைந்தாண்டுகட்கு முன்னரே, கழகப்பணிச் சிறப்பினை நம் கவிஞர் அவர்கள் கண்டுணர்ந்து கழறிய கவிதை.

இது மட்டுமன்று, கழகம் பொறுப்பேற்று நடாத்தி வரும் மறைமலையடிகளார் நூலகத்தைப் பாராட்டிப் பாவேந்தர் புகழ் மாலை சூட்டுகின்றார்; அதில்,

“அடிகளார் பெயரில் அமைந்த நூலகத்தால்
விடியலாய் வையம் விழிக்கும்!—கொடி பறக்கும்!
வாபகையே என்றழைத்து வாகை மலர்சூடும்
நாமடைவோம் வெற்றி நடை!

என்கின்றார். இங்ஙனம் அவர் கழகத்தையும் அடிகளார் நூலகத்தையும் நன்குணர்ந்து போற்றும் புகழுரைகள் மிகப்பல.

அவற்றை விரிக்கின் பெருகும். தமிழ்த்தொண்டுக்கு அவர் தரும் மதிப்பு எத்துணை என்பதற்கு எடுத்துக்காட்டாக இரண்டொன்றைத் தந்தோம்.

பாரதிதாசனார் உள்ளம் பரந்த உள்ளம். நாட்டு நலம் நாடும் நல்ல உள்ளம். தமிழ்மொழிப்பற்றில் மூழ்கித் திளைக்கும் முனைப்புடைய உள்ளம். அத்தகைய நல்லாரின் பெயரால் அமையும் பல்கலைக்கழகம் பல்லாற்றானும் சிறக்கும் என்பதில் ஐயமில்லை. பாவேந்தர் பெயரில் அமையும் இப் பல்கலைக் கழகத்தால் அவர் கண்ட கனவுகள் நனவாகும் என எதிர்பார்க்கிறோம். எல்லாத் துறைகளிலும் தமிழின் மறுமலர்ச்சியைக் காண விழைந்தவர் அவர். அதனை அவர்தம் தமிழியக்கம் என்னும் நூலில் பரக்கக் காணலாம். அதில் ஓரிடத்தில் "சில கற்றார் பலகற்க விரும்பும்வகை செய்தல் வேண்டும்" என்கின்றார். இப் பாடல் வரிகள் பல்கலைகள் வளர வழிவகை காண வேண்டும் என்னும் அவர்தம் அவாவினை கோடிட்டுக் காட்டுவதாகும். அது மட்டுமன்று "**நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்**" என நவின்றவரும் அவரே.

இங்ஙனம் ஒரு குடும்பத்தையே பல்கலைக்கழகமாகக் காண விழையும் அவருக்கு நாம் செய்யும் கடப்பாடு இதுவெனக்காட்டும் வகையில் இன்று நம் தமிழக அரசு பாவேந்தர் பாரதிதாசனார் பல்கலைக்கழகத்தை நிறுவுகின்றது எனில் அது மிகையன்று. தமிழ் நெஞ்சங்களில் இன்ப வெள்ளம் வழிந்தோடச்செய்ய இதைவிட சிறந்த தமிழ்ப்பணி வேறுமுண்டோ ?

எனவே, நாட்டில் பல கழகங்கள் தோன்ற முன்னோடியாய் நின்ற சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் இப் பாரதிதாசனார் பல்கலைக்கழகம் அமைவது கண்டு இறும்பூது எய்துகின்றது, அதனை வாழ்த்தி வரவேற்கின்றது.

முன்னர்ச் செயல்வீரர் காமராசர் பெயரில் மதுரையில் பல்கலைக்கழகம் கண்ட தமிழக அரசு, இன்று பாவேந்தர் பெயரில் பல்கலைக்கழகம் காண்பது சாலப் பொருத்தமுடைத்தாகும். காமராசரும், பாவேந்தரும் தமிழின நலம்நாடிய நல்லோர்கள். அவ்வகையில் இப் பல்கலைக் கழகமும் பல சிறப்பும் பல வளமும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகின்றோம்.

———

# மலையும் ஞாயிறும்

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

தனித்தமிழ் இயக்கம் கண்ட தவச் செல்வர் **மறைமலையடிகள்**; தனித்தமிழ் மூலத்தின் மூலத்தை முன்னியறிந்து உலகின் மூத்த மொழி தமிழே என்பதை நிலைப்படுத்தியவர் **மொழிஞாயிறு பாவாணர்.**

மும்மொழிப் புலமையாலும் மூழ்கிய ஆய்வுத் திறத்தாலும், தமிழர் தவப்பயனால் காலத்தின் கொடையாய்க் கனிந்த கனி, மறைமலையடிகள்! மும்மொழிப் புலமையளவுள் கட்டுண்ணாது, பன்மொழித் திறவோராய் இலங்கிய ஏந்தல், மொழிஞாயிறு பாவாணர். அவரைப்போல் 58 மொழிகளில் வேர்ச்சொல் காட்டி விளக்கவல்ல ஓர் அறிஞர் தமிழுலகுக்கு வாய்ப்பரோ ?

பாவாணர், பைந்தமிழ் ஆய்வுப் புலத்துள் புகுந்த அடிநாளி லேயே அவர்தம் திறத்தை அடிகளார் கண்டுகொண்டார். கண்டுகொண்டது மட்டுமோ? காழ்ப்புக் கடுகளவும் கொள்ளா ராய்க், கட்டிளம் பருவத்துக் கன்னித்தமிழ் ஞாயிற்றின் கலைக் கதிர் ஒளிக்கவினை, உந்தும் உவகைப் பெருக்கால், ஒள்ளிய சான்றாக வடித்து வரைந்து வைப்பாக்கினர் :

"தலைமைக் கண்காணியார் தவத்திரு **திரஞ்சு** (Trenchu) எழுதிய 'சொல்லாராய்ச்சி', பேராசிரியர் **மாக்சுமுலர்** எழுதிய 'மொழியறிவியல்', பேராசிரியர் **சாய்சு** எழுதிய 'ஒப்பியல் மொழி நூல்' முதலிய ஆங்கில நூல்களை யாமே பெருவிருப்புடன் படித்துக்கொண்டிருக்கும்போது, அந்த முறையில் தமிழ்ச் சொற்களை ஆராய வேண்டுமென்று விரும்பினேன். தமிழ்ப் பேரறிஞர்கட்குப் புலப்படாமல் மறைந்து கிடந்த விரிவாகவும் வியப்பாகவும் உள்ள தமிழ்மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் **கால்டுவெல்** எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்வு' நூலால் புலப்படலாயிற்று. எனினும், பண்டாரகர் கால்டுவெல் அறியப்படாத வட்டாரத்தில் செய்ததொரு முயற்சியாதலால் தமிழ்ச்சொற்களையெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந் துள்ளனர் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இதுவே மொழியியலை ஆராய வேண்டுமென்று எம்மைத் தூண்டியது. எனவே ஞானசாகரம் (அறிவுக்கடல்) என்னும் எம்முடைய இதழில் முதல் தொகுதியில் அத் துறையில் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதி வெளியிட்டேம். ஆனால் அப்போது சமயம், மெய்ப் பொருளியல்,

இலக்கிய வரலாறு ஆகிய துறைகளில் எம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டி ஏற்பட்டமையால் மொழியாராய்ச்சித் துறையில் தொடர்ந்து ஈடுபடக் கூடவில்லை. ஆயினும், 'தகுதியுடைய அறிஞர் யாராவது இத்துறையில் ஆராய்வதற்கு முன்வரக் கூடுமா?' என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தோம். அப்போது யாழ்ப்பாணம் திருத்தந்தை ஞானப்பிரகாசர் தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது, ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது. எனினும் மொழியியல் ஆராய்ச்சித்துறை மிகவும் விரிவும் ஆழமுமுடையதாதலால் பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக் கொண்டு நன்கு புரிந்துகொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினோம். அந்த நேரத்தில் திரு. தேவநேயனார் யாம் எதிர்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியது கண்டு பெருமகிழ்வுற்றோம். அத் துறையில் அவர் மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து எழுதியிருப்பவற்றைத் தமிழ் அறிஞர்கள் நன்றாக நம்பலாம்.

''சொல்லாராய்ச்சித் துறையில் திரு, தேவநேயனார் ஒப்பற்ற தனித் திறமையுடையவர் என்றும் அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றோம்.''

பின்னாளில் பாவாணர் என்ன கூறுகின்றார் :

''தமிழர் தொன்மையை உலகிற்கு அறிவித்தவர் கால்டுவெல் பெருமகனார்; தனித்தமிழ்க்கு வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர்; செடியாகத் தழைக்கச் செய்தவர் நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள்; நானே மரமாக வளர்ந்து வருகிறேன்.''

சொல்லாய்வு ஒன்றையே தம் வாழ்வுப் பணியாகக்கொண்டு ஒப்புரைக்க ஒருவர் இல்லாவகையில் ஓங்கிய மொழிஞாயிறு எத்துணை உறுதியால் கூறினார்! இது வறுஞ்செருக்கென் றொருவர் கூறவும் கூடுமோ?

மலைமேல், ஞாயிறு கொண்ட பற்று மிகப் பெரிது! மிக மிகப் பெரிது! அடிகளாரைச் சுட்டிச் சொல்லாத ஒரு நூல் பாவாணர் வரைந்ததில்லை. எங்கும் அடிகள் திறம் இயம்பப்பெறும்! இனிதின் இசைக்கப் பெறும்!

அடித்தல் என்னும் சொல்லை விளக்க வரும் பாவாணருக்கு முன்னே அடிகளே காட்சி வழங்குகிறார் :

"இந்தப் பேராசிரியர் மும்மொழியும் கற்றிருந்தாலும் மறைமலையடிகள் காலில் கட்டியடிக்கக் கூடக் காணமாட்டார்"

அடைதலுக்கும் அடிகளே அடைந்தார்: "மறைமலையடிகள் 1950ஆம் ஆண்டு இறைவன் திருவடி நிழலையடைந்தார்"

அடித்தலுக்கும் அடைதலுக்கும் அணுகிய அடிகள் அடிகளுக்கு வாராதிருப்பாரா?

'அடிகள் பேரறிஞரான இறையடியார் பெயருடன் இணைத்து வழங்கும் மதிப்புச்சொல், மறைமலையடிகள்"

கட்டுரை இலக்கணத்தில் பலவகைச் சொற்றொடர்களை யமைத்துக் காட்ட வேண்டிய இடம்:

"தனித்தமிழை வளர்த்த பெருமை பல்லவபுரம் பொதுநிலைக் கழகத் தலைவர் தெய்வத்திரு மறைமலையடிகட்குரியது"

"மறைமலையடிகளை இராவ்சாகிபு இரத்தினசாமிப் பிள்ளை அவர்களின் மகள் திருமணத்தை நடத்தி வைக்கும்படி அழைத்த தற்கு அவர் 'யான் இன்று பாயும் படுக்கையுமாயிருக்கிறேன். ஆதலால் யான் வருவதற்கில்லை. ஆனால் என் மூத்த மகன் மாணிக்கவாசகத்தை அனுப்பி வைக்கிறேன்; ஏற்றுக்கொள்க" என்று பதில் எழுதிவிட்டாராம்.

'ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையளாகும் சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்' என்று, அன்ன நடையையும் அன்னமன்னாள் நடையையும் வியப்பார் கல்வியில் பெரியவர்! மொழிக்கலை ஞாயிறு எந்நடையை நயக்கிறார்?

"ஓதிம (அன்ன) நடையினும் மாதர் நடையினும் உயர்ந்த அழகுள்ளது மறைமலையடிகள் நடையாகிய செந்தமிழ்நடை."

இந் நடைவழியில் நற்றமிழராவது நயந்து நடக்கின்றனரா?

தமிழின் இடைக்கால பிற்கால நிலைகளுக்கு இரங்கிக் கழகக் கால நிலைக்கு உயர்த்த விழைந்து உரிய தொண்டுகள் செய்தவர் அடிகளார்; உரையும் பாட்டுமாம் இரு திறத்திலும் அப்பணி யாற்றினர் அதனை நினைவுகூரும் மொழிஞாயிறு,

"தேனும் பாலும் போன்ற தூய தீந்தமிழ்ச் சொற்களால் உரைநடையும் செய்யுளுமாகிய இரு வடிவிலும் பல்துறை தழுவி ஐம்பதிற்கு மேற்பட்ட அருநூலியற்றி முதலிரு கழக நிலைக்குத்

தமிழைப் புதுக்கி அதற்குப் புத்துயிர் அளித்தவர், மாநிலத்து மக்கள் உள்ளவரை மறையாப் புகழ் பெற்ற மறைமலையடிகளே'' என்கின்றார்.

அடிகளின் மும்மொழிப் புலமையை வியந்து மொழிஞாயிறு போற்றும் அருமையும் அழகும், செம்மையும் செறிவும், சீர்மையும் செழுமையும் நினையும் நெஞ்சினும் இனிமை சேர்ப்பதாம்:

''உலக மொழிகள் (ஏறத்தாழ) மூவாயிரத்துள், ஒருபோதும் வழங்கா இலக்கியப் பெருமொழி என்னும் வகையிற் சமற்கிருதமும், என்றுமுள்ள உலக முதல் உயர்தனிச் செம்மொழி என்னும் வகையில் தமிழும், உலகக் கலவைப் பெருமொழி என்னும் வகையில் ஆங்கிலமும் தலைசிறந்த மொழிகளாகும். இம் மூன்றும் ஒருங்கே வைத்தார் பலர் இருந்தாரேனும், அவர் அனைவருள்ளும் எவரெத்து (Everest) என்னும் வெள்ளிமலை போலுயர்வும், அமேசான் (Amazon) என்னும் அமெரிக்க ஆறுபோல் அகன்றும், அமைதிவாரியின் (Pacific Ocean) தென்னகழி போல் ஆழ்ந்தும் பிறங்கித் தோன்றிய பெரும் புலமை வாய்த்தவர் மறைமலையடிகளே என்பது மிகையாகாது.''

எவரெத்து உயர்வையும், அமேசான் அகலத்தையும் அமைதி வாரியின் ஆழத்தையும் மொழிஞாயிறு குறிப்பானேன்? வாளா உவமையோ குறித்தார்! இல்லை! இல்லை! இல்லை!

அறிவின் இலக்கணம் முக்கூறு பெற்றது. அவை கூர்ப்பு, அகற்சி, ஆழம் என்பன. அறிவின் இலக்கணம் கூறும் வள்ளுவர் 'நுண்மாண் நுழைபுலம்' என்றார் அம் மூவியல்களையும் மூவுவமைகளால் நிறுவி நிலைபெறுத்தினர் மொழிஞாயிறு! அதனால் மறைமலையாம் முழுதறிவுப் பிழம்பினை அடையாளம் காட்டினர். அம்மட்டோ?

அறிவே இறைமையாகக் கண்ட ஆளுடைய அடிகள் 'ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்' என்றார். அம் மூன்றனையும் கொண்டு அடிகளாரின் இறைமை இயல் தெரிவித்தார் மொழிஞாயிறு.

இறைமையாம் அறிவும், அறிவாம் இறைமையும் ஒருங்காய்த் திகழ்ந்த மறைமலையின் நிறைநிலை கண்டு உரைக்க எவரால் இயலும்! 'ஞாலத்து இருளகற்றும் ஞாயிற்றால்' தானே இயலும்!

உரையும் பாட்டும் வல்லாரை, உரையும் பாட்டும் வல்லார் போற்றினால் அவ்விரு வகையாலும் போற்றுவர் அன்றே! அடிகளாரைப் பாவாணர் பாவால் பல்கால் போற்றினர். அவற்றுள் ஒன்று:

''மூவா யிரமாண்டு மோதும் வடமொழியாற்
சாவாந் தசைகின்ற தண்டமிழை—மேவிக்
குமரித் தனிநிலைக்குக் கொண்டுவந்த அப்பர்
அமரர் மறைமலை யார்''

தனித்தமிழ்த் தந்தை அப்பரும் ஆனார்; அமரரும் ஆனார்! அப்பராயது தனித்தமிழ் மூலவராம் தன்மையால்! அமரராயது மொழிக் காவல் அரிமாவாகக் கிளர்ந்தமையால்! 'அமரராவர், போர் மறவர்' என்பது மொழிஞாயிறு குறிப்பு.

புலமையை மதிக்கும் புலமையும், புலமையைப் போற்றும் புலமையும் 'புலமைக்குப் புலமையாம்.' புகழ்ப் புலமையாம்! ''புலமிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக்கவர்க்கே புலனாம்'' என்பதை மெய்ப்பித்த 'மலை'யும் 'ஞாயிறு'ம் மலையும் ஞாயிறுமாய் மன்னி வாழ்க.

———

## ''எங்கள் தமிழ்!''

[வேலூர். ம. நாராயணன், எம். ஏ,]

''எங்கள் தமிழ்—தூய
சங்கத் தமிழ்—இன்பம்
பொங்கும் தமிழ்—புகழ்
தங்கும் தமிழ் வாழ்கவே!

கன்னித் தமிழ்—மூன்று
மன்னர்த் தமிழ்—அரும்
வண்ணத் தமிழ்—உயர்
எண்ணத் தமிழ் வாழ்கவே!

இளமைத் தமிழ்—நல்ல
வளமைத் தமிழ்—காதல்
குலவும் தமிழ்—வீரம்
உலவும் தமிழ் வாழ்கவே!

வெல்லத் தமிழ்—பகை
வெல்லுந் தமிழ்—நலம்
நல்கும் தமிழ்—என்றும்
ஒல்காத் தமிழ் வாழ்கவே!

சந்தத் தமிழ்—எழில்
சிந்தும் தமிழ்—எங்கும்
முந்தும் தமிழ்—நம்மை
உந்தும் தமிழ் வாழ்கவே!''

# பதிற்றுப்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

பதிற்றுப்பத்தில் ஆறும்பத்தின் தலைவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பெயர் வந்த காரணத்தைச் சிலர் ஆராய்ந்து எழுதியுள்ளனர். நான் எழுதிக் கழக வழியாக வெளிவந்த 'விலங்கின விளக்கம்' என்ற நூலிலும் இதைப் பற்றி விளக்கம் கூறியுள்ளேன். செந்தமிழ்ச்செல்வி 49ஆம் சிலம்பில் பரல் ஆறில் (பிப்ரவரி 1975) ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு வந்த பெயர்க் காரணத்தை புலவர் ஒருவர் ஆராய்த்துள்ளார். 'ஆடு' என்ற சொல்லிற்கு வெற்றி என்று பொருள் கொண்டு வெற்றி யைக் கொள்கையாகக் கொண்ட சேரலாதன் என்று பொருள் கொள்ளுதலே பொருளுடையதும் பொருந்துவதுமாகும் என்று எழுதியுள்ளார். வெற்றியைக் கொள்கையாகக் கொள்வது என்பது எல்லா மன்னருக்கும் பொருந்தும். அப்படிப் பொருந்துவ தென்றால் இமயம் சென்று வென்றதாகக் கூறப்படும் சேரன் செங்குட்டுவனுக்கு அந்த அடைமொழிப் பெயர் சிறப்பாக வழங்கியிருக்க வேண்டும்.

புலவர் முனியப்பன் "எவராலும் பிடித்தற்கரிய 'வருடை' எனும் மலையாட்டைப் பிடித்துக் கொணர்ந்த அரிதினும் அரிய செயலால் "ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்" என்று வழங்கிய தாகச் செல்வியிதழில் (திசம்பர் 74) எழுதியுள்ளார். இந்த விளக்கம் நான் அதற்கு முன்னர் எழுதிய விலங்கின விளக்கத்தில் கூறிய கருத்தை ஒட்டியதாகும். பொருத்தமான விளக்கமாகும். ஆடுகளைக் கவர்ந்ததோ, மீட்டதோ ஒரு மன்னனுக்கு தனிச் சிறப்பில்லை. ஆடுகளையும், மாடுகளையும் கவருவதும், மீட்பதும் சங்க கால மன்னர்களின் போர் முறையாகும். சங்க கால மன்னர் களுடைய அரிய செயலில்லை. ஆனால், போர் முறைப்படி உரிய செயலாகும். பேரறிஞர் உ. வே. சாமிநாதய்யர் குறிப்புரையில் பகைவர்களால் கொல்லப்பட்ட மலையாடுகள் என்ற விளக்கத்தைக் கவனிக்க வேண்டும். இந்தக் குறிப்புரையில் 'மலையாடுகள்' என்று கூறியது சரியானதாகும். ஆனால் பகைவர்கள் சேர நாட்டிலிருந்து மலையாடுகளைக் கவர்ந்ததை மீட்பித்ததாகக் கூறியது தவறான செய்தியாகும். அறிவியல் தெரிந்தோர் விலங்கின பழக்க வழக்கங்களைத் தெரிந்தோர் இச் செய்தியை

ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். தண்டகாரண்யத்து வருடை என்று சொல்லப்பட்டதால் இந்த வருடை என்ற மலை ஆடு தண்டகாரண்யத்தில் மலைகளின் குவடுகளில் வாழ்ந்த மலையாடு என்பதில் ஐயமில்லை. தண்டகாரண்யம் எதுவென்று கண்டுபிடிக்க வடமொழி நூல்களை நான் ஆராய்ந்தபோது அந்த நூல்கள் பலவாறு கூறுகின்றன. ஆந்திர நாட்டிற்கு அப்பால் தண்டகாரண்யம் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அங்கு மலைகளும் உள்ளன. வடமொழி நூல்களில் தண்டகாரண்யத்தைப்பற்றிக் கூறிய செய்திகள் குழப்பத்தைத் தருகின்றன. ஆனால் விந்தியமலையே தண்டகாரணியத்துக் 'காடாரம்பம்' ஆகும். புதுவையிலிருந்து திண்டிவனம் செல்லும் பழஞ்சாலையில் 'காட்ராம்பாக்கம்' என்ற ஊர் உள்ளது; காடு ஆரம்பிக்கும் பாக்கம் என்ற பொருளுடையதாகும். பதிற்றுப்பத்தில் 'நாடு காணெடுவரை' கூறப்பட்டுள்ளது. நான் மாகியிலிருந்து உதக மண்டலத்திற்குக் கூடலூர் வழியாகச் சென்ற போது 'நாடுகாணிச் சுரம்' என்ற ஊர்ப்பெயர் மலையாளத்தில் கூறப்பட்டதைக் கேட்டேன்; வியப்புற்றேன்; சுரம் என்ற சங்கக்காலப் பெயர் கடக்க முடியாத, நடக்க முடியாத வழிகளைக் குறித்து வழங்கினதாகும். நாடுகாணிச்சுரம் என்ற வழக்கு கடினமான வழியைக் கடந்து நாட்டைக் கண்டதைப் பற்றியதாகும். பதிற்றுப்பத்து 85ஆம் பாட்டின் 'நாடுகாண் நெடுவரை'க்குக் கூறிய உரையைக் கவனிக்க வேண்டும். இந்தப் பாட்டின் தலைப்பாக 'நாடுகாணெடுவ்ரை' என்ற பெயர் கூறப்பட்டுள்ளது.

''தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்''

—பதிற்றுப்பத்து. 85 : 6-7.

நீலகிரி மலையேறும்போது கேரளப் பக்கத்தில் ஓர் ஊர் இன்றும் 'நாடுகாணிச்சுரம்' என்று அழைக்கப்படுவதும் பதிற்றுப் பத்தில் கூறப்பட்ட 'நாடுகாண்நெடுவரை' என்ற வழக்கை ஒட்டி யிருப்பதும் அரிய செய்தியாகும். ''நாடுகாண் நெடுவரை யென்றது தன்மேல் வெளி நாட்டைக் கண்டு இன்புறுவதற் கேதுவாகிய ஒக்கமுடைய மலையென்றவாறு; இச் சிறப்பாலே இச் செய்யுளுக்கு நாடுகாணெடுவரை என்று பெயராயிற்று'' என்று விளக்கம் கூறியதைக் கவனிக்க வேண்டும். சிறந்த மன்னன் உயர்ந்த மலைகளின்மேல் நின்று நாடுகளைக் காணும் வழக்கத்தை 'நாடுகாண் நனந்தலை'' (மலைபடு கடாம்-270) ''பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை'' (அகம். 372) என்ற வழக்குகளில் காணலாம். மலையைக் கடப்பதற்கு அரிதான வழிகளின்மேல் நாடு உண்டாகிக் காணப்படுவதால் 'நாடுகாணிச்

சுரம்' என்ற தூய தமிழ்ப் பெயர் மலையாள மொழியில் காணப்படு கின்றது. இந்த நாடுகாண் நெடுவரைக்கும் மேலேதான் இந்த வரையாடு என்ற வருடை இயற்கையாக வாழ்கின்றது. வரையாடு என்ற பெயர் மலையாடு என்று இக்காலத்தில் வழங்கும் பெயருடன் ஒப்புமையுள்ளதைக் காணலாம். சேரலாதன் தண்டகாரண்யத்தில் கோட்படுத்தின வருடைகள் மலையாடுகள்தாம். ஆடுகோட் பாட்டு சேரலாதன் என்ற பெயரில் 'ஆடு' என்பது மலையாடு என்று இன்றும் கூறப்படும் செய்தி முற்றிலும் உண்மையே. பிற செய்திகள் தவறு. சங்கப் புலவர்கள் இயற்கையை உள்ளது உள்ளவாறு ஆராய்ந்தவர். இப்பொழுது கூறப்படும் 'காட்டாடு' வேறு; 'மலையாடு' வேறு.

இன்றும் இந்த மலையாடுகள் ஆனைமலையில் உச்சிக் குவடு களில் வாழ்கின்றன. இதனுடைய கால்கள் மலைக்குவட்டுப் பாறையைக் கவ்விப் பற்றிப் பிடித்துக்கொள்வதால் குவடுகளில் வாழமுடிகிறது. இந்த மலையாட்டை நீலகிரி, ஆனைமலையில் காப்பித் தேயிலைத் தோட்டம் வைத்த வெள்ளைக்காரர்கள் வேட்டை யாடினர். மிகவும் கூர்ந்து நோக்கும் விலங்கானாலும், விழிப்புடன் தன்னைப் பாதுகாக்கும் விலங்கானாலும் சில சமயங்களில் வெள்ளைக் காரர்கள் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றனர். உச்சிக் குவட்டில் வாழ்வதால் சுட்டுக் கொன்ற மலையாடுகள் பள்ளத்தாக்கில் விழு வதுண்டு. அவற்றைப் பழங்குடி மக்கள் இறங்கி எடுத்துத் தருவர். வெள்ளைக்காரர்கள் அதன் இறைச்சியை விரும்பி உண்பர். வெள்ளைக்காரர்கள் இந்த மலையாட்டை வேட்டையாடு வது கடினமானதும், சிறப்பானதும், பெருமையானதும் ஆகும் என்று கருதினர்.

புதுக்கோட்டை அரசர்கள் வரிப்புலியை வேட்டையாடிக் கொன்றதில் பெருமை பெற்றனர். மைசூர் மாமன்னர்களும் புலிகளை வேட்டையாடிப் பெருமை தேடிக் கொண்டனர். இன்றும் உதகமண்டலத்தில் உள்ள மைசூர் அரண்மனையில் மைசூர் மன் னர்கள் ஒவ்வொருவரும் எத்தனை புலிகளைச் சுட்டனர் என்ற செய்தி எழுதப்பட்டுள்ளது. நிறையப் புலிகளைச் சுட்ட மன்னன் சிறந்த பெருமை பெற்றான். இதுபோன்றதான ஒரு மரபு மறவர் வழிவந்த புதுக்கோட்டை மன்னர்களிடையேயும் இருந் தது. இந்த மரபு சங்க காலத்திலேயே இருந்தது. இந்த மரபிலே தான் மலையாட்டைக் கவர்வது அரிய பெரிய செயலாக, வெற்றி யாகச் சங்க காலத்தில் கருதப்பட்டது. இந்த வருடையை நச்சினார்க்கினியர் 'சரபம்' என்று பொருள் கூறி எண்கால் வருடை என்றழைத்தனர்.

என்னுடைய தந்தையார் தலைமை ஆசிரியராக இருந்த திண்டிவனம் புனித அன்னாள் ஆசிரியர்பயிற்சிப்பள்ளியில் சாரணர் பாடிய பாடல்களில் "நாம் சரப மானைப் பிடிக்கும்போது யாதொரு சத்தமும் கூடாததால் பழகுவோம். நாம் மவுனத்தைக் காக்க, வேகம் வேகம் நம் குருளை மந்தை விவேகம்" என்ற பாட்டைக் கேட்டிருக்கிறேன். இது சாரணர் பாட்டாகும். ஏனென்றால் நானும் அந்தப் பள்ளியில் சாரணனாக இருந்தேன். சாரண இயக்கம் சிறப்புற நடந்த பள்ளி திண்டிவனம் அன்னாள் பள்ளியாகும். சாரண இயக்கத்தில் சேரும் இளையவர்களை முதலில் 'குருளை' என்று தூய தமிழ்ப்பெயரிட்டழைத்தனர். சாரண இயக்கத்திலே சேர்ந்து பயிற்சி பெற்றுத் தேர்வுகள் பெற்று முதிய சாரணர் ஆவது மிகவும் கடினமானதாகும். சாரண இயக்கத்தில் முதலில் 'குருளையாக' நான் இருந்தபோது 'சரபமான்' என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்ட வருடையை, மலையாட்டைப் பிடிக்க 'யாதொரு சத்தமும் கூடாததால்' என்ற பாட்டுவரி பிற்காலத்தில் என்னைக் கவர்ந்தது. மலையாட்டைச் சுடுவதற்கு வெள்ளைக் காரர்கள் எந்தச் சிறிய ஓசையையும் தவிர்த்தனர். சிறிது ஓசை கேட்டாலும் மலையாடு ஒரு குவட்டிலிருந்து இன்னொரு குவட்டிற் குத் தாவும். மஞ்சு சூழ்ந்த உச்சிக்குவட்டில் வாழ்வதால் சுடுவது எளிதானதன்று. இந்தச் சாரணர் பாட்டில் வேகம், விவேகம் என்ற சொற்கள் என்னைக் கவர்ந்தன. வேகமும், விவேகமும் இல்லாவிட்டால் மலையாட்டைப் பிடிக்கமுடியாது. அவ்வாறு தண்டகாரண்யத்திலிருந்து வேகமும், விவேகத்தோடும் மலையாட்டைப் பிடித்த சேர மன்னனையே பதிற்றுப்பத்தில் "ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்" என்று சிறப்பித்துள்ளதைக் காணலாம்.

நச்சினார்க்கினியர் 'எண்கால் வருடை' என்று புராணச் செய்தியைக் கூறினார். ஆனால் எட்டுக்கால்கள் உடைய விலங்கு இயற்கையில் இல்லை. ஆனால் பிற்காலத்தில் நிறுவித்த சோழர் காலத்துச் சரபேஸ்வரர் செப்புச்சிலையில் எட்டுக்கால்கள் காட்டப் பட்டுள்ளன. ஆனால் இது புராணச் செய்தியை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்ட செப்புச்சிலையாகும். எண்கால் வருடை என்பது பொருளற்றது என்பதை எனது 'சங்க இலக் கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் தெளிவாக விளக்கி யுள்ளேன். வருடைக்கு எட்டுக் கால்கள் இருப்பதாகப் புராணச் செய்திகள் கூறியதற்குக் காரணம் இந்த வருடை மஞ்சு சூழ்ந்த மலைக்குவடுகளில் வாழ்வதால் அரிதாகத்தான் பார்க்கமுடியும். நாலு கால்களைவிட எட்டுக்கால்கள் இருந்தால் உச்சி மலைக் குவடுகளில் வாழும் இந்த விலங்கு குவடுகளில் பிடிப்பாக நிற்கும் என்று நினைத்திருக்கலாம். பிற்காலத்தில் ஆன் ஆடு என்ற

பெயரில் 'தகர்' என்று மலையாட்டை அழைத்தனர். நிகண்டுகள் இப் பெயரைக் கூறுகின்றன.

இந்த விலங்கை வேட்டையாடிக் கொல்வது மிகவும் அரியது, சிறப்பானது, பெருமை தருவது என்று ஆங்கிலேய வேட்டையாளர்கள் கருதினர். தண்டகாரண்யத்திலிருந்து உயிருடன் பிடித்துத் தொண்டியில் கொண்டுவந்த 'ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்' என்ற சிறப்புப் பெயர் சேரமன்னனின் பெயரில் அடைமொழியில் வழங்கியதைக் கவனிக்காமல் வெறும் "வெற்றி பெற்றவன்" என்று கூறுவது பொருத்தமற்றது. இயற்கை அனுபவ அறிவு மற்றும் அறிவியல் அறியாது சங்க நூல்களின் விலங்கினச் செய்திகளுக்கு விளக்கம் கொடுப்பது பொருத்தமில்லை. நேரில் கண்டதைப் பட்டறிவோடும் உள்ளதை உள்ளவாறு கூறும் அறிவியல்தான் Nature Study என்றும் இப்போது Ecology என்று கூறப்படும் புதிய ஆர்வமான அறிவியல் துறையாகும். அந்த அறிவியல் துறைக்குக் கி. பி. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு நேர்பட்ட சான்றுகள் சங்க நூல்களில் கிடைக்கும் போது சங்க இலக்கியம் உலக இலக்கியங்களில் ஒப்பற்ற இலக்கியம் என்பதில் ஐயமில்லை. குடத்திலிட்ட விளக்காக உள்ள சங்க இலக்கியம் குன்றில் இட்ட விளக்காக உலகத்தோர் உணா வேண்டுமென்றல் சங்க இலக்கியச் செய்திகளைப் பிறமொழிகளில் மொழிபெயர்க்க வேண்டும்; விளக்க வேண்டும்.

———

# நெல்லையில் நெடியமால்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,

26, இராமகிருட்டிண சாலை, சேலம்-7 ]

திருநெல்வேலி என்றாலே சிவபெருமான் உறையும் இடங்களான கயிலையும் பொதியிலும் எனத் திருஞானசம்பந்தப் பெருமானால் சிறப்பிக்கப்பெறும் தமிழ் வளர்த்த பொதிகை மலையும், அறுமுகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றான சீர்கெழு செந்திலும் சிற்பக் கருவூலங்களான திருவாலீசுரமும், கிருட்டிணபுரம் கோயிலும், 'தென்னக எல்லோரா' எனப்பெறும் கழுகுமலை வெட்டுவான் கோயிலும், வம்பார்குன்றம் நீடுயர்சாரல் கொண்ட குற்றாலமும் நினைவிற்கு வருதல் இயற்கையே. மேலும் பாட்டுக்கு ஒரு புலவன் பாரதியார், கப்பலோட்டிய தமிழன் திரு. வ. உ. சிதம்பரனார், 'நாட்டிற்கு ஒரு வீரன்' எனத்தகும் கட்ட பொம்மன் போன்றோரும் நினைக்கத்தக்கவர்களே.

> ''வரிதருவண்டு பண்முரலுஞ் சோலைத்
> திக்கெல்லாம் புகழுந் திருநெல்வேலி''

என்றும்,

> ''கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை
> சிந்துபூந்துறை கமழ் திருநெல்வேலி''

என்றெல்லாம் முத்தமிழ் விரகராம் சம்பந்தப் பெருமானால் சிறப்பிக்கப்பெறும் பெருமை உடையது திருநெல்வேலி.

இங்குள்ள நெல்லையப்பர் கோயில் ''நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன்'' எனச் சுந்தரமூர்த்திகளால் பேசப்பெற்ற பாண்டிய மன்னனால் கட்டப்பெற்றது. இங்கு ஆடவல்லானின் ஐந்து சபைகளில் ஒன்றான தாமிரசபை உள்ளது. அஃது ஐந்து தொழில்களில் ஒன்றான படைத்தல் தொழிலை உணர்த்தும் காளிகாதாண்டவம் ஆடப்பெற்ற பேறு பெற்றது.

கருவறையை அடுத்த வடபக்கத்தில் திருமகள் கேள்வனாகிய திருமால் தனக்கே உரிய சயனத்திருக்கோலத்தில் அறிதுயிலில் காணப்படுகிறான். சிவக் கோயில்களில் பறவையேறு பரமன்

பள்ளி கொண்ட பெருமானைக் காட்சி அளிக்கும் ஒருசில பதிகளில் இதுவும் ஒன்றாகும். ஏனைய கோயில்கள் தில்லை நடராசர் கோயில், ஆத்தூர் சோமநாதர் கோயில் ஆகியவையாம். செந்தமிழ் நாட்டின் பொற்காலச் சிற்பியான மாமன்னன் முதலாம் இராசராசன் காலத்தில் இந்தத் திருமுன் புதுப்பிக்கப்பட்டதாகத் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் தமது 'இடைக்காலச் சோழர்கள்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பள்ளிகொண்ட பரமன் திருமுன்னில் 'மாணு உருவாகி ஒரு மண் அளந்த காரணத்தால்'' நெடியமால் எனப் பெறுவோனின் செப்பு வடிவம் காணவேண்டிய ஒன்றாகும். தாமரைப் பீடத்தில் நின்ற திருக்கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளான். தலையில் மணி முடியும், காதுகளில் குண்டலங்களும், கைகளில் கடகங்களும், தோள்களில் தோளணிகளும், கழுத்தில் மாலைகளும் காணப்படுகின்றன. ''திருமாது வாழ் வாட்டமின் வளமாலை மார்பன்'' என்ற குலசேகரப் பெருமான் திருவாக்கின்படி மார்பகத்தில் தனக்கே உரிய 'வைஜயந்தி' என்னும் வனமாலையை அணிந்துள்ளான். வயிற்றில் வயிற்றுக்கட்டும், இடுப்பில் 'கடிபந்த'மும் தென்படுகின்றன. 4 கைகளுடன் உருவாக்கப்பெற்றுள்ளான். பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் உள்ளன. அவை இரண்டையும் பிடித்த கைகள் 'கத்திரி அஸ்த'த்தில் காட்டப்பட்டுள்ளன. மேலும் சங்கும் சக்கரமும் அண்ணலை நோக்கியவாறு வடிக்கப்பட்டுள்ளன. முன் இரண்டு கைகளில் கவசம் காணப்படுகிறது. இடையில் அணிந்துள்ள ஆடை அழகுற அமைந்துள்ளது. ஆடையின் மடிப்பு இருபுறமும் விசிறி போன்று உள்ளது.

ஆழி மழைக்கண்ணனுக்கு ஆயிரம் பெயர்கள் உண்டெனினும் இருபத்து நான்குதாம் மிக முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. இந்த 24 வடிவங்கள் ஒன்றுபோன்று தோன்றினும், சங்கு, சக்கரம், கதை, தாமரை ஆகியவை எந்தெந்தக் கரங்களில் உள்ளன என்ற அடிப்படையில்தான் இந்த வடிவங்களில் வேறுபாடு காண இயலும். எடுத்துக்காட்டாக, பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் சங்கும், முன் இடக்கையில் தாமரையும், முன் வலக்கையில் கதையும் இருந்தால் அந்த வடிவம் மாதவன் எனப்படும். பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும், முன்இடக்கையில் கதையும், முன்வலக்கையில் தாமரையும் காணப்படின், அந்த வடிவம் சனார்த்தனன் எனப்படும். இவ்வாறு 'ரூபமந்தனம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளதாகத் திரு. கோபிநாதாரவ் என்ற ஆராய்ச்சியாளர் கூறுகின்றார். இங்குள்ள வடிவத்தின் பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில்

சங்கும் இருந்தாலும், முன் இரு கைகளில் கதை மற்றும் தாம ரைக்கு மாற்ருகக் கவசம் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

நீல்மணிமிடற்றனுன சிவபெருமானின் மணவழகர் வடிவில் சிவ னுக்கும் பார்வதிக்கும் பின்னுல் தங்கையை நீர் வார்க்கத் தாமோ தரன் கையில் பொன் கவசத்துடன் வடிக்கப் பெறுகின்ருன். பின் வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட வேண்டும். முன்இடக்கையிலோ அல்லது வலக்கையிலோ தங்கக் கவசம் இருக்க வேண்டும். இங்குள்ள வடிவில் திருமால் மட்டுமே காணப்படுகிருனேயன்றிச், சிவபெருமான், மலேமகள், மண்மகள், மலர் மகள் மற்றும் நான்முகன் ஆகியோர் இல்லே. மேலும் தங்கக் கவசத்தை ஒரு கையால் இன்றி இரு கைகளிலும் ஏந்தியாவாறு கரணப்படுவது மற்றுமொரு வேறுபாடாகும்.

வானவரும் தானவரும் கடலேக் கடைந்து அமுது எடுத்ததைப் பங்கிட்டுக் கொள்ளும்போது வானவர்கள் மட்டுமே அமுதத்தை அருந்த வேண்டும் என்ற நோக்குடன் திருமால் மோகினி வடிவம் எடுத்தான். இதை,

> "கடல் கடைந்தமுதங் கொண்டு கலசத்தை நிறைத்தாற்போல்"

எனப் பட்டர்பிரான் பெரியாழ்வாரும்,

> "அலேகடலேக் கடைந்து அமரர்க்கமுதருளிச் செய்தவனே"

எனச் சேரமன்னர் குலசேகரப் பெருமாளும்,

> "பெண்ணுகி யின்னமுதம் வஞ்சித்தானே"

என்றும்,

> "பெண்ணுகி அமுதூட்டும் பெருமானுர்"

என்றும்,

> "தடங்கடலேக் கடைந்தமுதம் கொண்டுகந்த காளே"

என்றும் மங்கை மன்னன் திருமங்கையாழ்வாரும் அருளிச் செய் துள்ளார்கள். மோகினி வடிவம் எடுத்தமையால்தான், தான வர்கள் அவனது பேரழகிலே மயங்கச் சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையானுல் எண்ணிய எண்ணியாங்கு எய்த முடிந்தது. இங்குள்ள வடிவத்தின் கையில் உள்ளதை அமுத கலசம் எனக் கொண்டால், வடிவமோ பெண் அன்று ஆணுக உள்ளது.

எனவே, இங்குள்ள திருவுக்கும் திருவாகிய திருமாலின் வடிவம் ஓர் அரிய படைப்பாகும். கண்ணேயும் கருத்தையும் கவரும் இத்தகு பொலிவுடன் கூடிய இந்த வடிவம் மாமன்னன் முதலாம் இராசராசன் காலத்ததாகக் கொள்ளப்படுகிறது.

———

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

**'இல்'-துளைத்தற் கருத்து வேர்ச்சொல் :**

(மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் அடிச்சுவட்டை யொற்றி அவர் நினைவை நெஞ்சில் போற்றி முனைவைச் செயலில் தேக்கும் வகையில் மேலும் எழுதவேண்டிய தலைப்புகளில் வேர்ச் சொற் கட்டுரைகள் இவண் படைக்கப்படுகின்றன)

உல்—இல்.

ஒ. நோ : புல்—பில்.

உல் = துளைத்தல். உல் = தேங்காயுரிக்கும் கருவி, உல்—உளி (வெட்டித் துளைக்கும் கருவி).

இல்—துளைத்தல். இல்—இலி—எலி (மண்ணைத் தோண்டும் உயிரி)

க., இலி = எலி.

இலிப்பூச்சி—கடற்கரை ஈரமணலில் குழிதோண்டி உட் செல்லும் உயிரி.

இல்—துளை. இல்லி—சிறு துளை, ஓட்டை.

"இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை" (புறநா. 164). இல்லிக் குடம்—ஓட்டைக்குடம். இல்லுதல்—உடைதல். இல்லி மூக்கு—சில்லி மூக்கு. இல்லி—சில்லி.

ஒ. நோ :

உப்பு—சுப்பு. இல்லி—சில்லி = உடைந்த சிதறல், சிறியவை.

சில்லிக்காசு—சல்லிக்காசு, சில்லி—சில்லறை.

இல்லி—சில்லி = ஓட்டை. சில்லடை—சல்லடை (துளைக ளுள்ளது).

க., இல்லண = வேடன்வலை.

க., இல்லாமல்லி—புறங்கூறுவோன்.

இல்லல்—துளைத்தல், துன்பம்.

*E.* ill, il A. (dial.) morally evil XII (Orm); causing harm, pain, or disaster XIII (Bestiary, Genesis and Exodus);

of bad quality XIII (Cursor M.); of evil intent XIV (R. Mannyng). B. out of health, sick XV; sb. evil XII (Cursor M.); adv. evilly, badly XII (Orm.).! *ON*. illar adj.; illa adv., ilt n. of adj. as sb.; ult. origin unkn. At first peculiar to areas of Scand. penetration; later much extended regionally in competition with evil, but still restricted in standard usage, the adj. being less common than the adv. (which is freely used in composition), and exc. in predicative use (e. g. he is ill), mainly confined to traditional collocations, as ill health (*ON*. ill heilsa), ill temper, ill usage, ill will (XIII Cursor M.—*ON*. illvili; later modelled on L. malevolentia *Malevolence*); ill mannered, ill—tempered. Sense B of the adj. appears to have been evolved from *ON*. impers. use with the neuter as in *mer er illt* I am ill, *varo peim ilt* of it made them ill. Hence (dial.) i. lly. XVI; see—LY[a].

இல்லல்—இன்னல் (துன்பம்).

ஒ. நோ: கல்லல்—தோண்டுதல். கல்லல்—கன்னல்—கன்னம் (திருடுதல்).

இல்+ஆ = இல்லா — இன்னா=துன்பம், இன்னாமை= துன்பவியல்பு.

'இன்னாமை இன்பம் எனக்கொளின்'' (குறள் 169)

இல்—துளைத்தல், துன்புறுத்தல், துன்பம். இல்+ஆ (இல்+ஆகியது, ஆவது) துன்பமாகியவை. ஆகு—ஆ.

ஒ. நோ: நில்+ஆ=நிலா, பல்+ஆ=பலா. (பல+ஆகியது, பல சுளைகளுள்ளது.) உண்+ஆ=உணா, (உணவாக அமைந்தது).

இல்—இலம்—துளைக்கப்படுதலால், துன்புறுத்தப்படுதலால் ஏற்படும் வெறுமை. வெறுமையின் விளைவாய வறுமை.

இலம்பாடு—வறுமை. இலம்படு—இலம்பாடு. படு—துணை வினை. படு—பாடு (முதனிலை நீண்ட தொழிற்பெயர்).

இல்—இல்லை—(உள்ளே) துளையுடையது, உட்காழ், உட்சோறு ஒன்றும் இல்லாதது. இல்+ஐ. 'ஐ' தொழிற்பெயரீறு. இல்லை (இன்மையுடையது).

ஒ. நோ: நல்லை (நன்மையுடையது).

"நல்லையல்லை நெடுவெண் ணிலவே" "தொல்லை நாள்" (தொல்+ஐ தொன்மையுடையது).

இல்—துளை, தாழ்வு, ஆழம். இலஞ்சி—ஆழ்ந்த நீர்நிலை, மடு. "கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சி" (புறநா. 37).

இல்—உட்டுளையுடையது, இயற்கையான குகைவாழ்விடம், செயற்கையான வீடு.

ஒ. நோ: புரை—துளை, இருப்பிடம்.

இல்—வீடு, இல் (இடவாகுபெயர்)—மனைவி.

ம., க. இல். தெ. இல்லாளு.

இல்—இடப்பொருளீறு, கட்டில், அட்டில், புட்டில்.

இல்—துளை, வெறுமை, ஒன்றுமின்மை. இல்—இன்மை குறித்த எதிர்மறை முன்னொட்டு.

எ - டு: இல்பொருள், இல்வழக்கு.

E. il+legal—illegal. il+proper — improper il+adequate—inadiquate.

இல்—எதிர்மறை இடைநிலை. வந்திலன், கண்டிலன்

இல்—எதிர்மறை பின்னொட்டு. கண்ணில் காலன்.

இல்—எல்—எல்லை(இல்—துளைத்தல், குழித்தல்)

எல்லை—(இல்—எல் குழித்துக்கல் நடப்பட்ட இடம்) கல் நட்ட இடம், குழித்த இடம், அடையாளம் குழித்த அல்லது பொறித்த இடம்.

இல்—இள்—இகு=துளைத்தல், துளைத்தற்கருத்தினின்று குழித்தல், தாழ்த்தல், தாக்கல், உடைத்தல், பிரித்தல், பகைத்தல், போட்டியிடல், நீங்குதல், கருத்துகள் தோன்றும்.

பிரிதல் "இகந்துறைவர் ஏதிலர்" (குறள் 1230)

நீங்கல் 'மடநனி யிகக்கும்"

இகு—இகல்

போட்டியிடல் "இகலித் தோற்ருல்" (சீவக. 904)

பகை "இகலென்னும் இன்னாத ஒன்றை" (குறள்)

இகலாட்டம்—போராட்டம். எந்நேரமும் இகலாட்ட மாயிருக்கிறது. (உ. வ.).

க., எசலாட்ட.

இகுதல்—தாழ்ந்து வீழ்தல்—"மாரியி னிகுதரு . . . . கடுங்கணை" (மலைபடு. 220) கொல்லுதல், வீழ்த்துதல்.

தாழ்த்தல்—"கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ" (மலைபடு. 44)

சொரிதல் "இகுத்த கண்ணீர்" (புறநா. 143, 13)

அறைதல் "முரசு கடிப்பிகுப்பவும்" (புறநா. 158, 11)

இயம் இயம்புதல் "நும் மருப்பிகுத்து" (மலைபடு. 391)

விரித்தல் "கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட" (சிலப். 26, 210)

ஒலித்தல் "முழவு கண்ணிகுப்ப" (மலைபடு. 532)

வீழ்ச்சி "நீரிகுவன்ன நிமிர்பரி நெடுந்தேர்" (ஐங்குறு. 465)

கரைந்துவிழுதல் "கான்யாற் றிகுகரை" (குறுந். 264)

இகல்—வீழ்தல், பொருந்துதல், ஒத்தல்

ஒத்தல் "குவிகமொ டிகலிய வங்கை" (நன். மயிலை. 268)

இகுளை—ஒத்த தோழி (ஒ. நோ: வீழ்—வீழ்தல், விரும்புதல்)

இகு—இகை=கொடு, நட.

இகு—பிரி, பகிர், பகிர்ந்து கொடு.

இகு—இகை—ஈகை

இள்—இய்—ஈய்—ஈ=தருதல், பகிர்ந்தளித்தல்

இகு—இகும் (துணைவினை) முன்னிலையசை, கண்டிகும் (காண்டலைத் தந்தோம். காண்டலைச் செய்தோம்.)

இகு—தாக்கு, வீழ்த்து

இகு—இகுள்=இடியேறு. இகளி—இடி

இகு—தாழ்த்து

இகு—இகழ் = தாழ்த்திப் பேசு

இகு—இகழ்ச்சி, இகழ்வு

இகு—இக்கு (தாக்குதல், துன்பம்)

இக்கட்டு—தடை, இடுக்கண், க., தெ. இக்கட்டு.

இக்கிடைஞ்சல்—இடையீடு, தொல்லை

இக்கிரி—முட் செடி

இக்கு—முடிச்சு, சிக்கல். "இக்கு வைக்கும் ஆடைவீழ" (திருப்பு. 375)

இக்கு—முடிச்சுபோன்ற கணுவுள்ள கரும்பு. "இக்கொடு தென்னங்காயும்" (கந்தபு. களவிரி. 15)

க., ம., தெ. இக்கு (கரும்பு)

இந். ஈக். வ., இக்சு

இல்—இள்—தாழ்தல், குறைதல், வலி குன்றல், மெலிதாதல்.

இள்—இள—இளது வலி குன்றியது, மென்மையானது. இளசு என்பது கொச்சை, எளசு என்பது கடுங்கொச்சை.

இளது கை—இடது கை, வலி குறைந்த கை; இளப்பமான கை.

ஒ. நோ ; வல்—வலம்—வலது, வலுவான கை

த. இடது கை. க. எட கை. தெ. எடமு செய்யி

இள்—இளம் (மெல்லிய, இளைய).

*G.* link = left. left handed.

*OHG.* lenkā = the left hand

link—clumsy, awkward, sinister.

*MHG.* slink—left.

*O. Irish* langah = the left hand.

G. Lahm—lame, halt, crippled, shaky, impotent.

E. left.　　(தொடரும்)

———

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன் இதழ் ௩௪௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

தலைவி, தனக்குத் தலைவனோடு நிகழ்ந்தமை தோழிக்குக் கூறியதாக அமைந்தது நான்காவது சிந்து. "அன்றொரு நாள் தேடி, என்னை நாடி, உரிமையோடு உறவாடி, அன்போடு கொஞ்சினான் ஒருவன், வஞ்சியே," என்று தோழிக்குத் தன் நெஞ்சில் அடைபட்டுக் கிடந்த செய்தியைத் தலைவி உரைத்தாள். யாரவன்? "என்னையாண்டவன் சிவஞானபுரத்தான், தேன் சிந்தும் மலர்க் கடம்பு பூண்டவன்," என்றும் தலைவி சொல்கிருள். "தெருவில் திரியும் யாரோ ஒருவனல்லன் அவன்! கங்கை வார் சடைக்கரந்தார், அசைந்த தோடும் திங்களும் மாலையும் முடிமீதணிந்தார், பெண்ணொரு பாகத்தார் நாடி மகிழும் மைந்தனவன்," என்றும் தலைவி மொழிந்தாள்.

"திங்களோடுங் கங்கைசூடும் மங்கைகூடும் பங்கர்நாடும்
தேனொழுகு தண்கடம்பு பூண்டவன்—சிவ
ஞானபுரம் மேவியென்னை யாண்டவன்—அன்று
தேடியென்றனை நாடிவந்துற வாடியன்பொடு கூடியங்கச
தெய்வதம்போ லேவந்து கொஞ்சியே—போன
வைபவந்தா னென்ன சொல்வேன் வஞ்சியே."

வேதங்களோதும் வேதனுக்கு—துறைபட்ட மறையவனுக்கு—முட்டாட்டாமரையோனுக்கு வேதத்தின் பொருளுரைத்தான் முருகன். 'கற்கக் கசடற' என்பார் திருவள்ளுவர். ஐயந்தீரவே நான்முகன் முருகனிடம் கற்ருன். இவ்வாறு கதை வழங்குகிறது. உட்பொருள் என்ன? அறிவு பரந்தது, விரிந்தது. எல்லாம் அறிந்தவருமில்லை, ஏதுமறியாதவருமில்லை. யானென தென்றிடும் புலைச் செருக்குப் புலவரையும் பீடித்துளது. ஏற்றம் இறைப்பவன் பாடிய பாட்டின் முதலடியைக் கேட்ட கல்வியிற் பெரிய கம்பனும் அடுத்துவரும் அடி என்னவாயிருக்கும் என்று திகைக்கவில்லையா? இதுவும் கதையாயிருக்கலாம். இருப்பினும் மக்களுக்குப் பாடம் கற்பிப்பது

"மூங்கிலிலை மேலே தூங்கு பனி நீரே!"

என்று சொல்லவும் பொழுது சாயவும் சரியாயிருந்தது. மறுநாட் காலைவரை கம்பன் காத்திருந்தான். அடுத்த அடி என்னவாயிருக்கலாம் என்று நினைத்துப் பார்த்து முடிவுக்கு வரமுடியவில்லை.

> "மூங்கிலிலை மேலே தூங்கு பனி நீரே,
> தூங்கு பனி நீரை வாங்கு கதிரோனே"

என்று ஏற்றம் இறைப்பவன் பாடலை முடித்தான்.

எழுத்தறிவில்லா ஏற்றம் இறைப்பவன் கற்பனை இயற்கையோடியைந்திருப்பதைக் கேட்ட கம்பனுக்கு அறிவுக் கடலின் ஆழம் எய்க்காதது என்று தெரிந்திருக்கும். நான்முகன் அறியாமையை அகற்றிய வேட்டுவக் கொடிச்சியின் காதலன் தன்னைக் கவர்ந்து ஆட்கொண்டதை நினைந்து மகிழ்ச்சியில் தலைவி திளைக்கிறாள். பூங்காவனத்தில் தோழியர்களோடு விளையாடும் பொழுது குளக்கரையோரம் தலைவி மேடையில் தனித்து நின்றாள். வள்ளி மணவாளன் தனிமையில் தவித்த தலைவிக்காதரவாகப் பரிவுடன் எதிரே நின்று, "பைந்தொடீ, நீயார்" என்றான். தலைவி தன் காதல் விவகாரத்தைத் தோழிக்குச் சொன்னாள்.

> "பாவையேபூ வாவியோரம் காவிலேநான் மேவியுயிர்ப்
> பாங்கிமார்க ளோடுவிளை யாடையில்—அவர்
> நீங்கவேவின் றேன்தனித்தோர் மேடையில்—வள்ளி
> பாகனாத வாகவந்தி மோகமோடெதி ராக நின்றடி
> பைந்தொடிநீ யாவளென்று பேணியே—கேட்கச்
> சிந்தையுந் திகைத்துநின்றேன் நாணியே."

ஏதிலன், எனினும் ஆதரவாக வந்தான். தலைவி திகைத்தாள்; நாணினாள். தலைவனுக்கும் தலைவிக்கும் குறுக்கே நிற்பது தலைவியின் நாணம். "நாணோடு உடன் பிறந்த நான்" என்று தலைவனிடம் தன் மன நிலையைக் கூற முடியாமல் தவிப்பாள் தலைவி. தலைவன்பால் செல்லத் தவிக்கும் காதல் ஒரு பக்கம். செல்லவிடாமல் தடுக்கும் நாணம் எதிர்ப்பக்கம். இவ்விரண்டுக்கும் இடையே தலைவி இருதலைக் கொள்ளி எறும்பு போல்வாள். எனவே நெஞ்சுக்குத் தலைவி கட்டளையிடுகிறாள்.

> "காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
> யானோ பொறேன் இவ்விரண்டு."

கள்ளைச் சிந்தும் காவு சூழ்ந்த சிவஞானபுரத்து முருகன் தலைவியை நெருங்கி,

"தேவமாதோ பூவில்வாழும் பாவையோ வண்பூவையோ என்
சிந்தைகவர்ந் திங்கு நின்ற தேதென்றான்—பெண்ணே
உன்றனூரும் பேருமென்ன வோதென்றான்."

"அமராவதிப் பெண்ணோ, அன்றி அலர்மேல் மங்கையோ, நாகணவாய்ப் புள்ளோ?" என்று தானே சொல்லிக்கொள்ளாமல் தலைவியையே கேட்டான் தலைவன்.

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு"

என்ற திருக்குறள், சிந்தின் வரிகளைப் படிக்கும்போது நினைவுக்கு வருகின்றது.

தலைவி பேசா மடந்தையானாள். தலைவனை முருகன் தன் பேச்சைத் தொடர்ந்தான். "நாக கன்னியோ நீ! அன்பு கொண்டாய். பேசாதிருத்தல் சரியோ? பெண்ணே, வாயினின்றும் முத்துதிர்ந்து போகுமோ?" என்றெல்லாம் தலைவன் விளம்பினான். "வாய் முத்துதிர்ந்து விடுமோ? முத்துச் சிந்தி விடுமோ?" என்றெல்லாம் பாண்டி நாட்டுப் பகுதியில் எளிய-பாமர மக்கள் பேசுவதை இன்றும் கேட்கலாம். இச் சொற்றொடரை நெல்வேலியில் வேய் முத்தரோடு அகலாதமர்ந்திருக்கும் வடிவன்னையை புலவர் ஒருவர் கேட்டார்.

"ஆய்முத்துப் பந்தர் மெல்லணை மீதுன் னருகிருந்து
நீ முத்தம் தாவென்றவர் கொஞ்சும் வேளையில் வித்தகித்தம்
வேய்முத்தரோ டென்குறைகளெல்லாம் மெல்லமெல்லச் சொன்னால்
வாய் முத்தம் சிந்தி விடுமோ நெல்வேலி வடிவன்னையே."

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்? தலைவியின் நாணம் அகன்று முறுவல் அரும்பியது இதழ்களில். தன் அனுபவங்களையெல்லாம் தலைவி தோழியிடம் சொல்லி ஆறுதலடைகின்றாள்.

பண்டைத் தமிழர் வாழ்க்கையில் - ஆண் பெண் உறவில் - ஒருவன் - ஒருத்தி என்ற தொடர்பில் களவும் கற்பும் இடம் பெற்றன. முருகன் இந்திரன் மகளைத் தந்தையளிக்க மணந்தான். வள்ளியைக் காதல் புரிந்து மனைவியாக்கிக் கொண்டவன். குன்றம்பூதனார் பரிபாடலில் தண்டமிழாய் வந்திலார் பரங்குன்றின் பயனைக் கொள்ளார் என்று பாடுகிறார்.

"நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின், சிறந்தது
காதற் காமம்; காமத்துச் சிறந்தது

விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி.
புலத்தலிற் சிறந்தது கற்பே, அதுதான்
இரத்தலு மீதலு(ம்) இவையுள் ளிடரப்
பரத்தையுள் ளதுவே, பண்புறு கழறல்
தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்கும் சுணங்கறை யதுவே.
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை.
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே.
அதனால், அகற லரியா அணியிழை நல்லார்
இகல்தலைக் கொண்டு துனிக்குந் தவறில(ர்), இத்
தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்.''

சிவஞானபுரத்து முருகனும் தானும் பகிர்ந்துகொண்ட இன்பங்களைத் தோழிக்குத் தலைவி விரித்துரைக்கின்றாள். பாண்டித்துரைத் தேவர் அவற்றைச் சிந்தாக வடிக்கிறார் :

திங்களோடுங் கங்கைசூடும் மங்கைகூடும் பங்கர்நாடும்
தேனொழுகு தண்கடம்பு பூண்டவன்—சிவ
ஞானபுரம் மேவியென்னை யாண்டவன் —அன்று
தேடியென்றனை நாடிவந்தற வரடியன்பொடு கூடியங்கசு
தெய்வதம்போ லேவந்து கொஞ்சியே—போன
வைபவந்தா னென்னசொல்வேன் வஞ்சியே.

துங்கநால்வே தங்களோதும் பங்கயா சனங்கொள்வேதன்
தோன்றிடாதி தென்றுதாழ்ந்து கூறவே—மறைக்
கேன்றபொருள் யாவுமையந் தீரவே—சொன்ன
சூதிலாதகி ராதர்மாமகள் மீதிலேவளர் காதலார்புரி
சுரதநயக்கலவி விந்தையே—அன
வரதம்நினைக்குமென் றன் சிந்தையே.

பாவையேபூ வாவியோரம் காவிலேநான் மேவியுயிர்ப்
பாங்கிமார்க ளோடுவிளை யாடையில்— அவர்
நீங்கவேநின் றேன்தனித்தோர் மேடையில் —வள்ளி
பாகனுதர வாகவந்ததி மோகமோடெதி ராகநின்றடி
பைந்தொடிநீ யாவளென்று பேணியே—கேட்கச்
சிந்தையுந்தி கைத்துநின்றேன் நாணியே.

தேவமாதோ பூவில்வாழும் பாவையோ பூவையோ என்
சிந்தைகவர்ந் திங்குநின்ற தேதென்றான்—பெண்ணே
உன்றனூரும் பேருமென்ன வோதென்றான்—பகுக்

தேனளாவிய காவுசூழ்சிவ ஞானமாபுர மேவிவாழ்வுறு
சிதரன்ம கிம்மநகன் ருனுமே—அதற்
கேதுமுரை யாதுநின்றேன் நானுமே.

மோகனவி வேகன்மயில் வாகனன்என் மானனத்து
முத்தமிட் டணைத்த தொரு சாரமே—காமப்
பித்தெனைப்பி டித்ததந்த நேரமே—இரு

முலைகளிற்சிறு பிறையெனத்தகு பலநகக்குறி களையமுத்தியென்
முகத்துமு கத்தைவைத்துப் புல்லினன்—இன்ப
சுகத்தையெ னக்குமெத்த நல்கினன்.

கோலமேவும் நீலமேகம் போலவாரும் ஏலநாறும்
கூந்தலில்ந றுமலரைச் சூட்டினன்—அடி
யேந்திழைபென் மீதில்மையல் காட்டினன் – கனி

கோவைவாய்வரு மதுசுவைத்தரை நீவிசேர்
கலைதனை நெகிழ்த்தியே
கொஞ்சமோஅ வன்செய்தொழி லானதே—யென்றன்
நெஞ்சமும்ப ரவசமாய்ப் போனதே.

சூலமேந்து நீலகண்டன் பாலனுஞ்செவ் வேலனங்கு
தாயமார ணைப்புகழ்ந்து கூறியே—எனை
நேபமோட ணைத்துமயல் மீறியே—அடி

தே'கைபே யுன தாகமேவிடு போகமே கனயோகமாபௌச்
சோர்விலாது செய்தான்பல லீலையே—யெவர்
தேருவார வன்போல்மத நூலையே."

(தொடரும்)

———

## நடைமுறையில் காண்பதென்ன ?

இந்த நாட்டில் உள்ளதுபோல் ஊழ்வினையின் நம்பிக்கை வேறு நாட்டில் இல்லை. அவரவர்க்கு இட்டபடியே எதுவும் நடக்கும் என்பது இந்த நாட்டுக் கிழவிகளும் உணர்ந்த ஞானம். ஆனால் நடைமுறையில் காண்பது என்ன? தன்னலம் என்று வந்துவிட்டபோது பொதுநன்மையைக் காற்றில் விட்டுவிட்டுப் பொதுவிதிகளைப்பற்றிக் கவலைப் படாமல் தான் மட்டும் எப்படியாவது எந்தக் குறுக்கு வழியிலாவது நன்மை பெற முயலும் முயற்சியையே காண் கிறோம்.

டாக்டர் மு. வரதராசனார்.

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை]

## 7. MAIN ROAD

Colony என்னும் சொல்லைப் பலர் சரியாக உச்சரிப்பதில்லை. "இந்தச் சொல் மிகவும் பழகிவிட்டதே. இது தமிழ்தானே" என்று சொல்லுபவர்கள் நிறைய இருக்கின்றார்கள். ஆனால் அதை உச்சரிக்கும்போது "காலணி" என்று சொல்லிவிடுவார்கள்! இவர்களைக் கண்டு இரக்கப்படுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?

சிலர் colony என்பது "குடியிருப்பு" என்று மனத்தில் வைத்திருப்பார்கள்! ஆனால் எழுதும்போது "குடியிருப்புக் காலனி" என்று எழுதிவிடுவார்கள்! colony என்னும் சொல்லிற்குக் "குடியிருப்பு" என்னும் பெயர்ப்பு போதுமானதாக இல்லை என்பதையே இது காட்டுகின்றது.

"குடியிருப்பு" என்னும் சொல் மிகவும் பொதுவானதொரு சொல்லாகும். பல நேரங்களில் பல்வேறு ஆங்கிலச் சொற்களுக்கு ஈடாகப் பயன்படும் சொல்லாகும் இது. Quarters குடியிருப்பாகவும் residence இருப்பிடமாகவும் lines இல்லங்களாகவும் இருக்கலாம். எனவே "குடியிருப்பு" என்னும் சொல்லைத் தக்க இடங்களில் கவனமாகப் பயன்படுத்தவேண்டும்.

புதிய குடியிருப்புகளைக் "காலனி" என்று கூறுகின்றோம். பலர் சேர்ந்து வாழும் இடம் "காலனி"யாகும். சேர்ந்து வாழும் இடங்களைச் "சேரி" என்று சொன்னாலே போதுமே! "சேரி" என்னும் முடிவைக் கொண்ட பெயர்கள் நிறைய இருக்கின்றனவே! நல்லிச் சேரி, பெருஞ்சேரி என்று எத்தனையோ எடுத்துக்காட்டுகள் இருக்கின்றனவே! இப்போது, பல ஊர்களில், colony என்னும் சொல்லுக்கு "நகர்" என்னும் சொல்லை அமைத்துவிடுகின்றார்கள். இது பொருத்தந்தானா என்பதைச் சிறிது ஆராயவேண்டும். ஏனென்றால் town என்னும் சொல்லை "நகர்" என்று ஏற்கெனவே வழங்கிவருகின்றோம். Town என்பதற்கும் colony என்பதற்கும் வேறுபாடு வேண்டாவா? எனவே colony என்பதற்குப் பொருத்தமான ஒரு மொழிபெயர்ப்பு வேண்டும். "குடியிருப்பு" என்னும் பெயரைச் சிறிது மாற்றியமைத்தால் "குடியிருப்பகம்" என்னும் பெயர் ஓடிவரும். "கூடி வாழ்ந்தால் கோடி

நன்மை'' என்பது பழமொழி. எத்துணை நயமாக இந்தப் பழமொழியை நம் முன்னோர்கள் அமைத்திருக்கின்றார்கள். ''கூடி வாழ்ந்தால்—'' என்று சொல்லி நிறுத்திப் பார்த்தால், பொருள் நன்ருகப் புரியும்! கூட்டாக அல்லது தொகுப்பாக அமைக்கப்பட்டுள்ள குடியிருப்புகளே colonies ஆகும். ''கூட்டமைவு'' என்பதே சரியான மொழிபெயர்ப்பு என்பதில் ஐயமில்லை. பல குடும்பங்கள், வீடுகள் அமைத்துக்கொண்டு, கூட்டாக வாழுமிடந்தான் colony. எனவே colony என்னும் சொல்லுக்குக் ''கூட்டகம்'' என்னும் மொழிபெயர்ப்பு சுருக்கமாகவும் பொருள் பொதிந்ததாகவும் இருக்குமென எண்ணுகின்றேன்.

கூட்டகங்களில் உள்ள சாலைகளைப்பற்றி மட்டும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றேன். Cross Road, Avenue, Main Road ஆகிய பெயர்களை நோக்குவோம். Cross Road என்பது ''குறுக்குச் சாலை'' என்று பழகிவிட்டது.

Avenue என்பது அழகான ஆங்கிலச் சொல். நானும், தமிழார்வமிக்க என் நண்பர் ஒருவரும், இந்தச் சொல்லை எவ்வாறு மொழிபெயர்க்கலாம் என்று நீண்ட நாட்களாக முயன்றுவந்தோம். கடைசியில் மலையைக் கல்லி எலியைப் பிடித்ததுபோல ''சோலைச் சாலை'' என்னும் மொழிபெயர்ப்பை அளித்து மகிழ்ந்தோம்! அதன் பிறகு இதை அனைவரிடமும் எடுத்துச்சொல்லிப் பெருமை பேசி வந்தோம். ஆனல் ஒரு நாள் ஒரு கூட்டகத்திற்குச் சென்றபோது, அங்கு ''நிழற்சாலை'' என்னும் பெயர் எழுதியிருப்பதைக் கண்டேன். தற்பெருமை எத்துணைத் தவருனது என்பதை அப்போது தான் நான் உணர்ந்துகொண்டேன். நிழல் தரும் சாலை ''நிழற் சாலை'', தேன்போல இனிப்பதைக் கண்டேன். ஆயினும் இந்த நல்ல, அழகிய ''நிழற்சாலை'' என்னும் மொழியாக்கத்தை ஏற்றுக் கொள்ளாதவர்களும் இருக்கத்தான் செய்கின்ருர்கள். ''இது யாருக்கு விளங்கும்'' என்று சிலர் ஏளனமாகப் பேசியது என் காதில் விழுந்தது! இத்தகையவர்களுக்கு, ஆறுதல் கடிதங்கள் தாம் வரையவேண்டும்! ஆங்கில வெயிலை வரவேற்கும் இந்த ஆர்வலர்கள் தமிழ் தரும் நிழலில் தங்க முன்வருவதில்லையே!

Main Road என்பதைச் சிலர் ''மெயின் சாலை'' என்று எழுதுகின்ருர்கள். வேறு சிலர் ''பிரதான சாலை'' என்று பகர்கின்ருர்கள். இந்த இரண்டு பெயர்ப்புகளும் நம்மை இருவேறு சாலைகளில் ஈர்த்துச்செல்கின்றன! Main file என்பதைத் ''தலைக் கோப்பு'' என்று குறிக்கின்ருேம். Main gate என்பதைத் ''தலை வாயில்'' என்று தெரிவிக்கின்ருேம். இதைப் போலவே Main Road என்பதைத் ''தலைச்சாலை'' என்று குறிக்கலாமா? தலைச்சன்,

இடைச்சன், கடைக்குட்டி என்னும் பெயர்களையெல்லாம் நாம் அறிந்திருக்கின்றோம். ஆயினும் "தலைச் சாலை" என்னும் பெயர் ஓசை நலம் பயக்கவில்லை என்று உறுதியாகக் கூறிவிடுவோம்! தலைச் சாலை என்பது தலையாய மொழிபெயர்ப்பாக இல்லையே என்று தயங்காது கூறிவிடுவோம்! ஒரு சிறு மாற்றந்தான் தேவையாகும். "தலைச் சாலை" என்பதை விடுத்து "தலைமைச் சாலை" என்று சொல்லிப் பார்ப்போம். இப்போது இனிமை பெருக்கெடுத்தோடுவதைப் பார்க்கலாம்.

Main Road = தலைமைச் சாலை.

---

## தமிழ்க் கல்லூரிகளின் கருத்தரங்கு

தமிழ்க் கல்லூரிகளின் கருத்தரங்கு, 1982 மார்ச்சு 2, 3 ஆகிய நாட்களில், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்றது. துணைவேந்தர் முனைவர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினர். அப்போது தஞ்சையின் பெருமையைச் சுட்டிக் காட்டி, தஞ்சை மாவட்டத்தில் 3,000 கோடி ரூபாய் மதிப்புள்ள கோயில்கள் உள்ளன எனக் குறிப்பிட்டு இவ்வளவு பெருமை பெற்ற தஞ்சை மாவட்டத்தில் ஆராய்ச்சிக்கு நிறைய வாய்ப்பு உண்டு எனவும் அவ்வாய்ப்பினைப் பல்கலைக்கழகத்தோடு சேர்த்துத் தமிழ்க் கல்லூரிகளும் பயன்படுத்திக்கொள்ளலாம் எனவும் தெரிவித்தார்கள். தமிழ்க் கல்லூரிப் பாடத் திட்டங்களில், கல்வெட்டு இயல், கோயிற் கலை, இதழியல், நாட்டுப்புறப் பாடல்கள், இசை முதலிய கலைகள் இடம்பெறவேண்டுமெனவும், தமிழ்க் கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களுக்கு வேலைவாய்ப்பினைப் பெருக்குவதற்கு ஏற்பப் பாடத்திட்டங்கள் அமையவேண்டுமெனவும் கருத்தரங்கில் வலியுறுத்தப்பெற்றது. கல்லூரி ஆசிரியர்கள் ஆராய்ச்சிப் பட்டம் பெற வாய்ப்புத் தரவேண்டுமெனவும், அவர்கள் முன்னரே செய்த ஆராய்ச்சி உரைகளைப் பதிப்பிக்க வாய்ப்புத் தரவேண்டுமெனவும், தமிழ்க் கல்லூரிகளின் நூலக வளர்ச்சிக்கு உதவிசெய்ய வேண்டுமெனவும், மற்றும் வீடுகட்டுதல் போன்ற வசதிகளுக்குப் பணஉதவி வழங்க அரசுக்குத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பரிந்துரை செய்யவேண்டுமெனவும் பேராசிரியர்கள் வேண்டுகோள் விடுத்தனர். துணைவேந்தர் தம் நிறைவுரையில் தமிழ்க் கல்லூரி ஆராய்ச்சித் திட்டம் வகுக்க இருப்பதாகவும், ஆராய்ச்சிக்கு ரூ. 3,000 முதல் 10,000 வரை வழங்க இருப்பதாகவும் குறிப்பிட்டார். டாக்டர் தி. முருகுரத்தினம் நன்றி கூறினர்.

# திருமூக்கீச்சரம்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம். பி. பி. எஸ், டி. ஓ.]

திருச்சி மாநகரில் உறையூரில் உள்ள அருள்மிகு. ஐவண்ணப் பெருமான் (பஞ்சவர்ணேஸ்வரர்) திருக்கோயிலே தேவாரத் தலவரிசையில் திருமூக்கீச்சரம் என்று வழங்கப்படுகின்றது. இது காவிரியின் தென்கரைப் பதிகளில் ஐந்தாவதாகும். சைவ சமய குரவர்களால் பதிகம் பாடப்பெற்ற 274 பதிகளில் இதுவும் ஒன்று. திருஞான சம்பந்தப் பெருமான் இப் பதியைக் கண்டு, மகிழ்ந்து, கசிந்துருகித் தேவாரப் பதிகம் பாடியுள்ளார். இப் பதிக்கு வில்வவனம், கோழியூர் எனப் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன.

கோயில் ஊருக்கு நடுவில் அமைந்துள்ளது. கோபுரம் இல்லாத முன்வாயிலைக் கடந்து உள் நுழைந்தால், கோயிலின் வெளிச்சுற்றில் நந்தி மண்டபமும், சிவதீர்த்தக் குளமும், அறநிலைய அலுவலகமும் இருக்கின்றமையினைக் காணலாம். உள் வாயில், கோபுரம் பொருந்தியது. சுதையால் ஆன சிற்பங்கள் இந்த மும்மாடக் கோபுரத்தை அழகு செய்கின்றன. உள்வாயிலின் இரு புறமும் முருகப்பெருமானும் பிள்ளையாரும் வீற்றிருக்கின்றனர். இக் கோயிலுள் உள்திருச்சுற்றும், கோயில் மதிலுக்கு வெளியில் வெளித்திருச்சுற்றும், அதற்கு வெளியே வீதியும் அமைந்துள்ளன. வெளித்திருச்சுற்றில் கோயில்நிலத்தில் பல குடில்கள் அமையப்பெற்றுப் பொதுமக்களின் வாழிடமாக உள்ளது. இந்த வெளித்திருச்சுற்றின் மேற்கு மதில் மட்டும் பழைய திருப்பணியின் எச்சமாக நின்றுகொண்டிருக்கிறது.

வெளித்திருச்சுற்றின் வடக்கு மூலையில் பழைய அம்மன் கோயில் கேட்பாரற்றுக் கிடக்கின்றது. ஒரு காலத்தில் காந்திமதி அன்னையின் உறைவிடமாக இருந்த திருமண்டபம் இன்று வௌவால்களின் புகலிடமாக விளங்குகின்றது. உள்ளே அழிபாடுகள்தாம் காணக்கிடக்கின்றன. முன்தூண்களிலுள்ள சிற்பங்கள் அழிந்து தேய்ந்து கிடக்கின்றன. கோயில் விமானம் மழையையும் காற்றையும் கவனிப்பாரற்ற நிலையையும் கடந்து, சிதலமான போதிலும் இன்னும் இருக்கின்றது.

கோயிலுக்குள் நுழைந்ததும் எதிர்கொண்டழைப்பது, ஐவண்ணப் பெருமான், ஐவண்ண நாயனர் என்றெல்லாம் அழகிய

தமிழ்ப் பெயர்கள் இருக்க, பஞ்சவர்ணேஸ்வரர் என்று வடமொழிப் பெயரில் அழைக்கப் பெறும் கிழக்கு நோக்கிய எம் பெருமானின் திருவுருவம்தான். இறைவனை மனத்தில் நினைத்தபடியே உள் திருச்சுற்றைப் பார்க்கலாம். இச் சுற்றின் இடப்புறத்தில் கண்ணாடி அறையும் வலப்புறத்தில் விழா மண்டப வாயிலும் உள்ளன. இடப்புறத் தூண்களில் ஒன்றில் கிழக்குப் பார்த்த படி, சோழ மன்னன் ஐவண்ணப் பெருமானின் அருள் வேண்டி நிற்கும் சிற்பத்தைக் காணலாம். அதே தூணில் தெற்குப் பார்த்த நிலையில் பாம்புகளின் அரசனான நாகராசன் பெருமானைப் பூசித்த கதை சிற்பமாகியுள்ளது.

இது புகழ்ச் சோழ நாயனார் தோன்றிய திருப்பதியாதலால் அப் பெருமானுக்கு இங்குத் திருமேனி நிறுவப்பட்டு வழிபாடு நடக்கின்றது. அவரையடுத்து நால்வரும் உதங்க முனிவரும் எழுந்தருளியுள்ளனர். இங்கே 1894ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 28ஆம் தேதி, 'உறையூர் ஸ்ரீ பஞ்சவர்ணேஸ்வரர் காந்திமதியம்மைக்கு மேற்படி உறையூர் விருப்பாட்சிபுரம் பெரிய செட்டித் தெருவு, நாகு செட்டி மனைவி தங்கத்தம்மாள் எழுதி வைத்த சிலாசாசனம்' காணப்படுகிறது. இதுதான் தற்போது இந்தக் கோயிலில் காணப்படும் ஒரே கல்வெட்டு.

உள் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் பிள்ளையார், முருகன் திருவுருவங்கள் உள்ளன. இருவருக்கும் இடையில் உள்ள திறந்த மண்டபத்தில் லிங்கோத்பவர், ஆவுடையார், பிள்ளையார் முதலிய தெய்வ வடிவங்கள் இருக்கின்றன. கருவறைச் சுவரின் வெளிப்புறத்தில் தெற்கு நோக்கி அழகிய தட்சிணாமூர்த்தி வடிவங்கள் இரண்டு அமைந்துள்ளன. இந்த வெளிச்சுவரின் சாளரங்கள் மிக அழகுபடச் செதுக்கப்பட்டுள்ளன. தூண்களை ஒட்டியிருக்கும் கல் முடிச்சுகள் கண்களைக் கவர்வன. இந்த வெளிச்சுவரை ஒட்டியுள்ள மண்டபத்துத் தூண்களில் பல அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை அண்மைக் காலத்தனவாக இருந்த போதிலும் கண்களைக் கவரும் வகையில் செதுக்கப் பட்டுள்ளன.

மகளிர் உருவங்களையே அடிப்படையாகக்கொண்டு யானை, குதிரை போன்ற வடிவங்களில் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. இவை இக்காலத்து 'டிரபீஸ்' (Trapeze) எனப்படும் வடிவமைப்பு விளையாட்டை நினைவூட்டுகின்றன. திருநெல்வேலி மாவட்டத் தைச் சேர்ந்த திருக்குறுங்குடி, ஆழ்வார் திருநகரி போன்ற கோயில்களில் உள்ள சிற்பங்களைப் போலவே இவை அமைக்கப் பட்டுள்ள அழகு கண்டு மகிழத்தக்கது. எத்தகையதொரு கலைமண

மும் கற்பனையாற்றலும் இருந்திருந்தால் இத்தகு எழில் தோற்றங்களை உருவாக்கியிருப்பார்கள் என்று எண்ணுகையில் வியப்புணர்வு நம்மை ஆட்கொள்கின்றது. இதே மண்டபத்தில் வடக்குப் பார்த்த தூண் ஒன்றில் ஓர் அழகிய பெண்ணின் சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது. அப் பெண் வடிவத்தின் மார்பகங்களில் ஒன்றை யாரோ கலையுணர்வற்ற கொடுஞ்செயலார் உடைத்திருக்கின்றனர். இந்த அழகிய சிற்பங்களெல்லாம் பூசணம் பிடித்து அழுக்குப் படிந்து இருந்ததைக் கண்டபோது மனம் நொந்தது. சில சிற்பங்கள் எண்ணெய் பூசப்பெற்றுத் திருநீற்றினுல் மெழுகிடப்பட்டிருந்தன. இந்தச் சிற்பங்கள் நம் முன்னோர்களின் கலைத் திறமைக்குச் சான்று கூறும் பட்டயங்கள். தமிழகத்தின் கலைவரலாற்றினை நிறுவும் அடிப்படைகள். இவற்றை நமக்குப் போற்றத்தெரியாவிட்டாலும் குற்றமில்லை, அழிக்காமலாவது இருக்கலாம் அல்லவா? இச் சிற்பங்களைப் பாதுகாக்கும் பணியில் அறநிலையத் துறையினருடன் பொதுமக்கள் ஒத்துழைக்க வேண்டும். கல்லூரிகளில் இயங்கும் சமுதாயப் பணி மன்றங்களின் மாணவத் தோழர்கள் கோயில்களில் சிற்பங்களைத் தூய்மை செய்து பாதுகாக்கும் பணியையும் தங்கள் நற்பணிகளில் ஒன்ருய்க் கொள்ளலாம்.

இப் பதியின் இறைவன், ஆவுடையார்மீது, நீளவாக்கில் அரை இலிங்கமாகக் காட்சியளிக்கின்ருன். எந்தப் பதியிலும் இல்லாத சிறப்பு இது. வடிவம் சலனமாகாது இருக்கப் ‘பந்தனம்’ செய்திருப்பதாகக் குருக்கள் திரு. விசுவநாதன் அவர்கள் கூறுகிருர்கள். பார்க்கும்போதே மெய்சிலிர்ப்பைத் தோற்றுவிக்கும் வகையில் ஐயனின் அருள் வடிவு அமைந்துள்ளது. உதங்க முனிவருக்கு ஐந்து காலங்களிலும் ஐந்து நிறங்களுடன் காட்சி தந்தமையால் பெருமானுக்கு, ‘ஐவண்ண நாயனர்’ என்ற பெயர் ஏற்பட்டது. இப் பதியின் பெருமைகளை மகாவித்துவான் திரு. மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடியருளிய உறையூர்ப்புராணத்தில் காணலாம்.

(தொடரும்)

———

## அரசாங்கம்

*மிகத் தாழ்ந்த தொழிலுக்குக்கூட அதற்கென ஒரு பயிற்சியில்லாமல் எவரும் மேற்கொள்வதில்லை. ஆனல், மிகக் கடினமான ஆளுந் தொழிலுக்கு மட்டும் எவர் வேண்டுமானலும் தகுதியுடையவர்களென்று முன்வந்துவிடுகிருர்கள்.*

—சாக்கரடீஸ்

# *தொல்காப்பியத்தில் உயிரளபெடை ஆட்சி

[மயிலம், ஆ. சிவலிங்கனார்,
ஆய்வாளர்-உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20.]

தமிழ் எழுத்துக்களுள் மெய் அரையளபும்,[1] குறில் ஓரளபும்,[2] நெடில் ஈரளபும்[3] இசைக்கும் என்பர். மூவள பிசைத்தல் ஓர் எழுத்தின்று.[4] இம் மூவகையான எழுத்துகளும் தம் அளபுகளில் நீண்டு வர வேண்டுமாயின், மெய்யெழுத்து மேலும் அரையளபும் குற்றெழுத்து மேலும் ஓரளபும் நீளலாம்.

''நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்''[5]

என்பது தொல்காப்பியம். இதுகொண்டு நெடில் தான் நீண்ட அளபு பெற வேண்டுமாயின் மேலும் ஈரளபு பெறுமோ எனின் பெறுது; ஓரோர் அளபே பெறும் என்பதற்காக ''நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே நின்று இசை நிறைக்கும்''[6] என்றார் தொல்காப்பியர்.

மெய் தனக்குரிய அரை மாத்திரையின் நீண்டுவரின் அஃது ஒற்றளபெடை எழுத்து எனப்படும். உயிர் அவ்வாறு தம் அளபுகளின் நீண்டுவரின் உயிரளபெடை எழுத்து எனப்படும்.

ஒற்றளபெடையைப் பற்றியில்லாமல் உயிரளபெடையைப் பற்றியே அறிஞரிடை வேறுபாடு காணப்படுகின்றது. இக் கட்டுரையில் தொல்காப்பியத்தில் வந்துள்ள உயிரளபெடை யாட்சியைக் கொண்டு உயிரளபெடையின் இலக்கணமாகத் தொல்காப்பியர் கருதுவது யாது எனக் காண்பதே நோக்கம்.

---

* சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 28—10—81 அன்று நடத்திய வாரக் கருத்தரங்கில் படிக்கப்பட்டது. நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கட்கு நன்றி.

1. தொல்காப்பியம் எழுத்து நூன்மரபு. 11
2. ,, ,, நூன். 3
3. ,, ,, ,, 4
4. ,, ,, ,, 5
5. ,, ,, ,, 6
6. ,, ,, மொழிமரபு. 8

(1) "பாஅ வண்ணம் தாஅ வண்ணம்"[7]

"பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்"[8]

"செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே"[9]

"மாத்திரை எழுத்தியல் அசைவகை யெனாஅ"[10]

என்னுமிடங்களில் உள்ள அளபெடைகளால், அளபெடையானது தனியெழுத்திலும், மொழி முதல் இடை கடைகளிலும் வரும் என்பதும், நெட்டெழுத்துகள் அளபெடுக்கும் என்பதும் பெறப்படும்.

(2) (அ) உயிரெழுத்துகளுள் அளபெடுப்பது குற்றெழுத் தன்று; நெட்டெழுத்தே என்பர் பிற்காலத்தார்.[11] குற்றெழுத் தும் அளபெடுக்கும் என்பது தொல்காப்பியர் கொள்கை என அறிவிப்பது,

"அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய வாகும் செயற்கைய என்ப."[12]

என அவர் கூறிய கூற்று, இந் நூற்பாவுக்கு உரை எழுதிய சேனாவரையர் 'தொழிஇஇ' என உதாரணம் காட்டினர். வேலைக் காரியைக் குறிக்கும் சொல் 'தொழி' என்பது; அஃது இகர ஈற்றுப் பெயர். அஃது அளபெடுத்துத் தொழிஇ' என வந்தது. அது மேலும் அளபு மிகுந்து 'தொழிஇஇ' என வந்தது. 'தொழிஇஇ' என்பதில் குற்றெழுத்தே அளபெடுத்திருப்பது காணலாம்.

(ஆ) குற்றெழுத்து நீண்டு நெடிலாகி மேலும் அளபெடுப் பதும் அளபெடையிலக்கணமாகக் கொள்ளலாம்.

"எஎன வரும்உயிர் மெய்யீ றாகாது"[13]

"ஔஎன வருஉம் உயிர்இறு சொல்லும்"[14]

இவற்றுள் முதல் வரியில் உள்ள 'வரும்' என்னும் சொல் இரண்டாம் வரியில் 'வருஉம்' என நீண்டது காணலாம். 'வரும்'

7. தொல். பொருள். செய்யுளியல். 205
8. ,, சொல். எச்சவியல். 58
9. ,, ,, கிளவியாக்கம். 15
10. ,, பொருள். செய்யுளியல். 1
11. ,, வீரசோழியம். 2, நன்னூல். 91
12. ,, சொல். விளிமரபு. 8
13. ,, எழுத்து. மொழிமரபு. 38
14. ,, ,, தொகைமரபு. 10

என்பதன் 'ரு' என்னும் குறில் நீண்டு 'வரூ' என்றாகி, மீளவும் ஓரளபு அதிகம் கொண்டு 'வரூஉ' என வந்தது.

3. செய்யுளில், 'இசைகெடின் மொழி முதல் இடை கடை நிலைநெடில் அளபெழும்'[15] என்பர் பிற்காலத்தார். உழாஅஅன், கிழாஅஅன், சிருஅஅர், மகாஅஅர், மாஅஅல், கோஒஒள் முதலிய பெயர்களை அளபெடைப் பெயர்[16] என ஆசிரியர் கூறுதலின் அளபெடை யியற்பெயர்களாகிய அவை வழக்கில் இசை நோக்கம் இன்றி வழங்கப்படுதலின் அக் கொள்கை பொருந்தாது. 'ஆடூஉ' 'மகடூஉ' என ஆண் பெண் பாலர்களை வழங்குவதும் காண்க.

பிற்காலத்தார் கண்டு காட்டிய இன்னிசை, சொல்லிசை, செய்யுளிசை அளபெடைப் பாகுபாடுகள் பொருத்தமாயில்லை யென்றும், அனைத்து அளபெடைகளும் ஓசையினிமை பற்றியே வருகின்றன என்றும் கூறுவர், க. பா. அறவாணன்.[17] அளபெடையியற் பெயர்கள் (ஆடூஉ, மகடூஉ[18]) உண்மையான் அளபெடைக்கு இசைக் குறைவு அடிப்படை யின்மையும், "குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும், நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"[19] என்றதால் இசைக் குறைவு அடிப்படையுண்மையும் ஆகிய இருநிலைகளையும் தொல்காப்பியர் கருதினர் என்னலாம்.

## 4. இன்னிசை:

(அ) "கூறுதல் உசாஅதல் ஏதீடு தலைப்பாடு"[20]
"மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான"[21]

இவ்விடங்களில் உள்ள 'உசாஅதல்' 'முறைதொகூஉம்' என்பன உசாதல், முறைதொகும் என்பனவற்றின் திரிபுகள். திரியாமல் இயல்பா யிருப்பினும் செய்யுள் இலக்கணம் பிழைபடுதல் இல்லை. அதனால் இவ்விடங்களில் அளபெடுத்தது இனிய ஓசை கருதியே என்னலாம். 'உசாதல்' என்பதில் 'ச'

---

15 நன்னூல். 91
16. தொல். சொல். விளிமரபு. 18, 24
17. முத்துக் கோவை. பக்கம். 99 திருச்சி, தமிழகப் புலவர்குழு வெளியீடு (1981)
18. தொல். சொல். இளவி. 2
19. ,, எழுத்து. மொழிமரபு. 8
20. ,, பொருள். பொருளியல். 12
21. ,, எழுத்து. புள்ளிமயங்கியல். 55

என்னும் நெடிலும், 'முறைதொகும்' என்பதில் 'கு' என்றும் குறிலும் அளபெடுத்தன. இவை இனிமையை இசைக்க வந்த அளபெடையாதலின் இன்னிசையளபெடையாம்.

(ஆ) "பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்"[22]

இதில் 'ஆகுநவும்' என ஒருசீராய் அமைய வேண்டுவது 'ஆஅ, குநவும்' என இருசீராய் அமைந்தது. இவ்வாறு ஆசிரியர் அமைக்கக் காரணம், இந் நூற்பாவை அளபெடை வண்ணச் செய்யுளாக அமைக்கக் கருதியதேயாம். செய்யுளின் வண்ணம் இருபது.[23] அவற்றுள் ஒன்று 'அளபெடை வண்ணம்' என்பது. அதற்கு அகச் சான்றாகவே,

"பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி யனைத்தும் கடப்பா டிலவே"

என நூற்பா அமைத்தார். இப்படியும் இன்னிசை யளபெடையை ஆளலாம் என்பது ஆசிரியர் கருத்து.

## 5. சொல்லிசை:

இனிச் சொல்லிசை யளபெடைகளும் ஆசிரியர் ஆண்டுள்ளமை காணலாம்.

சொல்லிசை யளபெடை என்பது ஒரு சொல்லை வேறு ஒரு சொல்லாக இசைக்கும் அளபெடை.[24] ஒரு சொல்லை வேறு ஒரு சொல்லாக இசைப்பதைச் சொல் நிலையிலும் பொருள் நிலையிலும் என இருவகையில் கொள்ளலாம். இங்கு இசை நோக்கம் இல்லை.

(1) "இடம்பெற்றுத் தழாஅல்"[25]

இதில் 'தழுவல்' என்பது 'தழாஅல்' என மாற்றப்பட்டது.

---

22. தொல். சொல். எச்சவியல். 53

23. ,, பொருள். செய்யுளியல். 210, 211

24. ஆ. சிவலிங்கனார். தொல்காப்பியர்கால அளபெடை. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு (4) மலர். பக்கம் 379. (1972)

25. தொல். பொருள். களவியல். 11

"அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி"[26]

இதில் 'களைய' என்னும் செயவென் வாய்பாட்டுச் சொல் 'களைஇய' எனச் 'செய்யிய' என்னும் வாய்பாட்டுச் சொல்லாக மாற்றப் பட்டது. இவை ஒருசொல் வேறு ஒருசொல்லாக இசைக்கப் பட்டன.

(2) (அ) "நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்."[27]

இதில் 'எழூஉதல்' என்பது சொல்லிசையளபெடை. 'எழுக' என்பது தன்வினை; அது 'எழுப்புக' என்னும் பிறவினைப் பொருளில் 'எழூஉக' என அளபெடுத்தது.

(ஆ) "பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்."[28]

இதில் 'ஆகுநவும்' என்னும் செய்வினைச் சொல் ஆக்கப்படுவனவும் எனச் செயப்பாட்டு வினைப் பொருளில் ஆளப்படுதற்காக 'ஆஅகுநவும்' என அளபெடுத்தது.

(இ) "மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல்."[29]

இதில் 'ஒருவல்' என்பது 'ஒராஅல்' என்றாயது. ஒருவல் என்பதற்கு நீக்குதல் என்பது பொருள். அதுவே 'நீக்காதே' என்று எதிர்மறைக்கும் வரும். "பயனில்சொல் பாராட்டு வானை மகன் எனல், மக்கட் பதடி யெனல்"[30] என்னும் குறளில் எனல் என்னும் அல்லீற்று வியங்கோள் உடன்பாடு எதிர்மறை இரண்டற்கும் வந்தது காண்க. அதனால் 'ஒருவல்' என்பதை இந்நூற் பாவில் அமைத்து உடன்பாடா எதிர்மறையா என்ற ஐயத்தைத் தோற்றுவிக்காமல், 'ஒராஅல்' என அளபெடுத்த நிலையில் கூறி எதிர்மறைப் பொருளை அறிவித்தார் ஆசிரியர்.

(ஈ) "பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்."[31]

'பே' என்பது அச்சப்பொருளது. அச்சத்தின் கொடுமை கருதிப் 'பேஎ' என அளபெடுத்த நிலையில் வழங்கப்பட்டது. அவ்வச்சம் தரும் ஆவியும் 'பேஎய்' எனப்பட்டது. எனவே ஒன்றன் வலி மிகுதியைக் கருதியவிடத்தும்—அழுத்தமாகச் சொல்லவேண்டிய விடத்தும் அளபெடைவரும் எனக் கொள்ளலாம். "கெடுப்பதூ

26. தொல். பொருள் அகத்திணையியல். 42
27. ,, எழுத்து. நூன்மரபு. 6
28. ,, சொல். எச்சவியல். 53
29. ,, ,, ,, 47
30. திருக்குறள். 196
31. தொல். பொருள். புறத்திணையியல். 19

உம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே, எடுப்பதூஉம் எல்லாம் மழை' [32] என்னும் வள்ளுவத்திலும் 'கெடுப்பதூஉம்', 'எடுப்பதூஉம்' என்பனவும் அவ்வாறு வலியுறுத்த வந்த அளபெடைச் சொற்களேயாம்.

(உ) கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்''[33].

இதில் 'தேஎம்' என்பது நாடு என்னும் பொருளது. அதன் பரப்பளவின் பெருமை குறிக்கத் 'தேஎம்'[34] என அளபெடுத்த நிலையில் நீட்டிச் சொல்லப்பட்டது.

**தொகுப்புரை:**

தொல்காப்பியத்தில் கண்ட உயிரளபெடைகளின் ஆட்சியைக் கொண்டு தொல்காப்பியர் கொண்ட உயிரளபெடை யிலக்கணத்தைப் பின் வருமாறு காணலாம்.

1. உயிரெழுத்துகளுள் குறிலும் நெடிலும் அளபெடுக்கும்.
2. இயற்பெயரளவில் இசைவேண்டாமலும், செய்யுளளவில் இசைவேண்டியும் வேண்டாமலும் அளபெடை வரும்.
3. இசைவேண்டியபோது இன்னிசையளபாக வரும்.
4. இசைநோக்கம் இன்றி ஒருசொல்லைப் பிறிதொரு சொல்லாக மாற்றவேண்டிய இடத்திலும், பொருள்நோக்கில் (1) தன்வினையைப் பிறவினையாகவும் (2) செய்வினையைச் செயப்பாட்டு வினையாகவும் (3) உடன்பாட்டு வினையை எதிர்மறையாகவும் (4) அச்சப்பொருளையோ பிறபொருளையோ வலியுறுத்துவதாகவும் பிறவாகவும் மாற்றவேண்டிய இடத்திலும் அளபெடை வரும்.
5. கா+குறை=காஅக்குறை, பலா+கோடு=பலாஅக்கோடு எனப் புணர்ச்சி விதியால் அளபெடைத் தோற்றத்தில் வரும் எழுத்தும் உண்டு.[35] அதை அளபெடை என்னாது எழுத்துப்பேறு என்று கொள்ள வேண்டும். வேண்டுமானால் அளபெடைப் போலி என்று கொள்ளலாம்.[36]

———

32. திருக்குறள். 15
33. தொல். பொருள். புறத். 19
34. தேஎம்>தேயெம்>தேயம்>தேசம்>தேஷ் (இந்தி)
35. தொல். எழுத்து. உயிர்மயங்கியல். 24
36. ஆ. சிவலிங்கனார், தொல்காப்பியர்கால அளபெடை, இ. ப. த. மன்றக் கருத்தரங்கு (4) மலர். பக். 379 (1972)

# செய்திகளும் குறிப்புகளும்

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி 14-ஆவது ஆண்டு விழா

நெல்லைக் குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் 14ஆவது ஆண்டு விழா 3—4 82 அன்று "அருள்மிகு நெல்லையப்பர் கோயில் வின்றசீர் நெடுமாறன்" கலை அரங்கில், மாவட்ட நூலக அதிகாரி உயர் திரு. டி. எஸ். குப்புசாமி, பி.ஏ., டி.லிப். எசி. அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ராணி அண்ணா கல்லூரிப் பேராசிரியர் திருவாட்டி ஆர். காந்திமதி, எம்.ஏ., அவர்கள் மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினர். இவ் விழாவினை யொட்டிக் கதம்ப நிகழ்ச்சிகளும், ஓரங்க நாடகமும் நடைபெற்றன.

## பாவாணர் பிறந்தநாள் விழா

நெய்வேலி உலகத்தமிழ்க் கழகம், தி. பி. உ௦௧௩, மீனம் ஏழாம் நாள் (21—3—82) மாலை 6 மணியளவில் நகர்க்கூறு 18இல் திருவனப் பள்ளியில் பாவாணர் விழாக் கொண்டாடப் பெற்றது. செயலர் க. தாமரைச் செல்வன் வரவேற்புரை நிகழ்த்தினர். சுரங்கத் துணைக் கண்காணிப்பாளர் பழ. சிங்காரம் பொறி. இ. தலைமைதாங்க, கோ. கண்ணன் பாவாணர் பிறந்தநாள் உரையாற்றினர். பின்னர்ச் சிலப் பதிகார இசை, இலக்கிய உரைப் பொழிவு, தொடர் நிகழ்ச்சியின் தொடக்க விழா நடைபெற்றது. புலவர்மாமணி ஏழிசைச் செம்மல் தமிழ்ச் சேரனர் சிலப்பதிகார உரை நிகழ்த்தினர். தா. அன்புவாணன் நன்றி நவின்றார்.

## டாக்டர் மா. இராசமாணிக்கனர் பிறந்தநாள் மலர் வெளியீட்டு விழா

டாக்டர் மா. இராசமாணிக்கனரின் 75-ஆவது பிறந்தநாள் மலர் வெளியீட்டு விழா, தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கட்டிடத்தில் 11—3—82இல் நிகழ்ந்தது. பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ் வரவேற்புரை நிகழ்த்தினர். ஆட்சிச்சொற் காவலர் கி. இராமலிங்கனர் தலைமை தாங்கினர். முனைவர் ம. பொ. சிவஞானம் மலரினை வெளியிடக் க. அ. செல்லப்பனர் அதனைப் பெற்றுக் கொண்டார். முனைவர்கள் மெ. சுந்தரம், சி. பாலசுப்பிரமணியம், வெ. தெ. மாணிக்கம், முத்துக் கண்ணப்பர், பேராசிரியர் ம. இ. தசரதன், புலவர் கோ. வில்வபதி, கவிஞர் தணிகை உலகநாதன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

## ஆலால சுந்தரனர் திருநாள் மங்கலம்

மறைந்த பேராசிரியரும், சிவனருட் செல்வருமான பூ. ஆலால சுந்தரனரின் நினைவு விழாவும், திருநாள் மங்கலமும் 27—3—82 அன்று மாலை, சென்னைக் கந்தகோட்ட, மெத்தை விழா மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்றநடுவர் மாண்புமிகு டி. என். சிங்காரவேலன் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினர். ஆலால சுந்தரனரின் திருவுருவப் படத்தைச் செட்டிநாட்டரசர் முனைவர் முத்தையா செட்டியாரவர்கள் திறந்துவைத்தார்கள். அது போது "ஆலாலசுந்தரனரின் வாழ்க்கையும் அரும்பணியும்" என்னுந் தலைப்பில் ஆட்சிமொழிக் காவலர் கி. இராமலிங்கனர், நல். முருகேச முதலியார், முனைவர் த. முத்துக் கண்ணப்பர், கோ. நீ. சிங்காரவேலர், டாக்டர் ஜி. மித்ரா அகஸ்டின், புலவர் வடிவேலாயுதனர், கடலூர்

நாராயணசாமி நாயுடு, சை. சி. நூற்பதிப்புக் கழகப் பொதுமேலாளர் திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்., பி. பாலசுப்பிரமணியம், முனைவர் மெ. சுந்தரம், டி. எஸ். பாலசுந்தரம், மா. சு. சம்பந்தம் ஆகியோர் உரையாற்றினர். திரு. ஊ. செயராமன் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## அருள்மிகு குலசை திரு. ப. இராமநாத அடிகள் பத்தாம் ஆண்டு ஆசான் வழிபாட்டு (குருபூசை) விழா

கழகப் புலவரும் சித்தாந்த பண்டிதருமாயிருந்து காலஞ்சென்ற குலசை ப. இராமநாத அடிகளின் 10 ஆம் ஆண்டு ஆசான் வழிபாட்டு விழா 4—4—82 ஞாயிற்றுக்கிழமை மாலை சைதாப்பேட்டை திருக்காரணீசுவரர் திருக்கோயிலில் நடைபெற்றது. அன்பர்கள் திரளாக வந்து விழாவினைச் சிறப்பித்தனர். அடிகளின் மாணவர் புலவர் மு. க. மாசிலாமணி முன்னின்று விழாவினைச் சிறப்பாக நடாத்தி அடிகளின் புகழ் பரப்பினார்.

## சொல்லாய்வுக் கருத்தரங்கம்—தொடக்கவிழா

மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் விட்டுச்சென்ற அகரமுதலிப் பணியினைச் செவ்வனே தொடரத் திங்கள்தோறும் நடைபெறவிருக்கும் சொல்லாய்வுக் கருத்தரங்கின் தொடக்கவிழா செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் 2—4—'82இல் அருங்காட்சியக நூற்றாண்டுவிழா நினைவுக் கூடத்தில் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் இரா. மதிவாணன், முனைவர்கள் பொற்கோ, மெ. சுந்தரம், ஔவை நடராசன், ஆட்சிச் சொற்காவலர் கீ. ராமலிங்கனார் ஆகியோர் உரையாற்றினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௬, ௩௫௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | பேரா. கே. முகையதீன், மேல்விசாரம் | 20—00 |
| ,, | முனைவர் கு. மோகனராசு, தமிழ் இலக்கியத்துறை சென்னைப் பல்கலைக் கழகம். | 100—00 |
| ,, | உயர்திரு. எஸ். எம். சேவியர், தூய மேரி பள்ளி, சென்னை-1 | 10—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | முருக. விசாக நம்பி, சென்னை-61 | 5—00 |

———

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

# கழகப் புதிய வெளியீடுகள்

## கழக ஆட்சியர் வ. சு. வரலாறு

ஆசிரியர்; கழக இலக்கியச் செம்மல்

புலவர் இரா. இளங்குமரன்.

அறுபது ஆண்டுகள் அருந்தமிழ்ப் பணியாற்றி, ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக வெளியிட்டவரும் புலவர்களைப் புரந்து போற்றிப் புகழ்பெறச் செய்தவரும் முத்தமிழ் ஆக்கும் பணியில் முந்திநின்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போன்றோரால் பாராட்டப்பெற்றவரும், தாமரைச் செல்வர், செந்தமிழ்ச் செல்வர், தமிழ்ப் பேரவைச் செம்மல் என்னும் பட்டங்களைப் பெற்றுப் பார்புகழ வாழ்பவரும் அறநிலையங்கள் பலநிறுவி அறப்பணியாற்றிவரும் அறச்செல்வரும் ஆகிய கழக ஆட்சியர் வ. சுப்பையா பிள்ளை அவர்களின் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையினை வளம்பட உரைக்கும் வரலாற்று நூல். 350 பக்கங்கள் அழகிய பதிப்பு. விலை ரூ 1: 00

**எலும்புப் பாதுகாப்பு**—டாக்டர் எம். சி. இராசமாணிக்கம், M.B.B.S., M.S. (General)., M.S. (ortho). M. A. M. S (ortho), F. I. C. S., F. R. S. H (London) விலை ரூ 12 00

**இஸ்லாமும் தமிழும்**—அப்துல் கறீம், எம்.ஏ. தமிழ்த்துறைத் தலைவர், காதிர் முகைதீன் கல்லூரி அதிராம்பட்டினம். விலை ரூ. 16 00

---

## நினைத்த காரியம் கைகூட வேண்டுமா?

கீழ்க்காணும் இரண்டு நூல்களையும் படியுங்கள்:

1. காரியசித்திமாலை 40 காசு
2. செல்வத் திறவுகோல் ரூ. 6-50

இந்த இரண்டு நூல்களும் உங்கள் இல்லத்தில் இருந்தாலே போதும். காரியங்கள் கைகூடும்! செல்வம் செழிக்கும்!

தொகுப்பாசிரியர்: சு. அ. இராமசாமிப் புலவர்

**தணிகைப் பதிப்பகம்**

293, தம்பு செட்டித் தெரு, சென்னை-1.

---

கிடைக்குமிடங்கள்:

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79 பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-1.
திருநெல்வேலி-6 மதுரை-1. கோயமுத்தூர்-1.
கும்பகோணம்-1. திருச்சிராப்பள்ளி-2.

அப்பர் அச்சகம், சென்னை-1.